# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச்சங்கத் திங்கள் வெளியீடு.

| | | |
|---|---|---|
| துணர் உக | பார்த்திப—பங்குனி 1946—மார்ச்சு | மலர் ௰உ |


## சிவகங்கை மன்னர் சிறப்புற வாழியர்!

தமிழகத்தில் பண்டைக் காலத்து மன்னர்களாய்ச் சேர சோழ பாண்டியர்கள் இத்தமிழ்நாட்டில் முடிதாங்கிக் கோலோச்சி மக்களைப் புரந்து வந்தனர். இவ்வரலாறு நூலளவிலேயன்றிச் செயலளவில் நாட்டையாண்டமக்கள் யாம் என உணர்த்தற்கு அறிகுறியாகப் பிற் காலத்திலும் சிற்சில குறுநில மன்னர்கள் தமிழகத்தின் ஒவ்வோ ரிடங்களில் ஆட்சி புரிந்து வருகிறார்கள். சேர வேந்தர்களின் ஆட்சி யினை நினைவு கூர்தற்குரிய அடையாளமாக இதுபோதுள்ள திருவி தாங்கூர் மன்னரவர்களும், ஆட்சியின்றேனும் பொன்னம்பலத்தில் தில்லைக் கூத்தன்றிருமுன் ஐந்தெழுத்துப் படியிலமர்ந்து அப்பெரு மாற்குவழிபாடியற்றும்அந்தணர்களால்திருமஞ்சனமாட்டப்பெற்றுத் திருமுடி சூட்டப்பெறும் பெருமையைத் தமக்கே உரித்தாகப் பெற்ற, சோழமன்னர்களின் வழித்தோன்றலாகப் பிச்சாவரமன்னரவர்களும், பாண்டிய அரசர்களின் ஆட்சியை நினைவு கூர்தற்கு அடையாளமாக இராமநாதபுரம் சேதுபதி மன்னரவர்களும், விளங்கி வருகின்றார்கள்.

தமிழகத்தில் மற்றும் பற்பல குறுநில மன்னர்கள் சிறு சிறு பகுதிக்கு அரசர்களாய்ப் பிரித்தானியப் பேராட்சிக்கு உட்பட்டு ஆட்சி புரிந்து வருகின்றார்கள். இவ்வாறு ஆட்சி புரிந்துவரும் குறு நில மன்னர்கள் தமிழ்மொழியையும் தமிழ்ப் புலவர்களையும் பிற் காலத்திற் போற்றி ஆதரித்துமுள்ளார்கள். அங்ஙனம் புலவர்களைப் போற்றி ஆதரித்த குறுநில மன்னர்களுள் சிவகங்கை மன்னரும் ஒருவ ராவர். இம்மன்னரின் முன்னோர் தமிழ்ப் புலவர்களிடத்து மிக்க மதிப்பு வைத்து முற்றூட்டு முதலாய சிறப்புக்கள் அளித்துப் புலவர் களைப் போற்றியுள்ளார்கள் என அறிகின்றோம். மன்னன் குடிகளின் நலத்தில் கண்ணுடையவனாய், செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண் புடையனாய், யாவர் மாட்டும் நன்மையே புரியும் நலனுடையனாய்,

கடிவன கடிந்து காப்பன காத்தோம்பும் திறனுடையனாய் அமைவா னாயின் அவனையே உலகம் உயிரெனக்கொண்டு போற்றும் என வறிந்த புலவர்கள்

"நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகம்"

எனப் போற்றிப் புகழ்வாராயினர். முறைவேண்டினார்க்கும் குறை வேண்டினார்க்கும் ஒப்ப நீதி வழங்கும் பண்பும் குடிகள் மாட்டு அரு ளுடைமையுமே உடைமையாகக் கொண்ட சிவகங்கை மன்னர்களின் வழித் தோன்றலாகிய திருமிகு **டி. சண்முக ராஜா அவர்கள்** *12—3—46*-ஆம் நாள் அரசியலாரிடமிருந்து ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக்கொண்டார்கள் என்பதனைக் கேட்டு யாம் மிக்க மகிழ்ச்சி யடைகின்றோம். சிவகங்கை அரசரின் முன்னோரால் நாட்டப்பெற்ற உயர்நிலைப் பள்ளியின் ஆண்டு விழாவில் சொற்பொழிவாற்ற எம்மை விரும்பி அழைத்திருந்தார்கள். யாம் ஆண்டுச் சென்று சொற்பொழி வாற்றிய காலத்தில இதுபோழ்து ஆட்சிக்கு வந்துள்ள அரசரவர் களின் அருங்குண நலங்களை அறிந்து மிக்க மகிழ்ச்சி பூத்தேம். நல்ல பண்பாடுகளைத் தமது உடைமையாகக் கொண்ட சிவகங்கை மன்ன ரவர்கள் தாம் ஆட்சியேற்ற உடனேயே தம் குடிமக்களுக்குப் பன்னி ரண்டு நூறாயிரம் வெண்பொற் காசுகளை வரி நீக்கி மகிழ்ச்சி யளித் துள்ளார். பின் வரப்போகும் நன்மைக்கு முன்னறிவிப்பாக மன்ன ரவர்கள் ஆட்சிப் பொறுப்பை ஏற்றவுடன் இவ்வாறு வரிநீக்கி மகிழ்ச்சி விளைவித்தது மகிழ்தற்குரிய ஒரு நற்செயலென எண்ணி யாம மன்னர் அவர்களைப் பாராட்டுகின்றோம். நம் சிவகங்கை மன்ன ரவர்கள் தாம் பிறந்த தமிழ்க்குடி சிறக்க, தமிழ் மொழியையும் தமிழ்ப் புலவர்களையும் புரந்து நீடூழி ஆட்சி புரிந்து நலன்பல விளைத்து இறையின் அருளால் எண்ணியவெல்லாம் இனிதுறப் பெற்று ஊழியூழி வாழியரென வாழ்த்துகின்றேம். வாழியர் திரு. சண்முக ராஜா வழிவழி சிறந்தே!

---

## திருச்சி, புரவலர்,

# திரு. பொன்னுசாமி பிள்ளை அவர்களின் மறைவு.

நம் கரந்தைத் தமிழ்ச் சங்கந் தோன்றிய நாட்டொட்டுத் திருச்சி ராப்பள்ளியில் சிறப்புற மிளிருந் தலைவர் திரு. T. P. வேதாசலம் பிள்ளை B. A., அவர்களின் குடும்பத்தார் சங்கத்தோடு தொடர்பு கொண்டு சங்கம் இந் நன்னிலையுறப் பல்லாற்றானும் உதவித் தொண் டாற்றிச் சிறப்பித்துள்ளார்கள். சங்க வரலாற்றை உள்ளுவோர் திருச்சி, திரு. வேதாசலம் பிள்ளை அவர்களின் குடும்பத்தினரையும் உள்ளும் வண்ணம் சங்கத் தொண்டிற் பங்கு பெற்றுப் பணியாற்றி யுள்ள குடும்பம் திரு. வேதாசலம் பிள்ளை அவர்களின் குடும்பமே

யாகும். சங்க வரலாற்றினை விரித்தெழுதுங்கால் திரு. வேதாசலம் பிள்ளை அவர்கள் குடும்ப வரலாறும் விரித்தெழுதப் பெறும் என்பதில் ஐயமுண்டோ ?

மக்களாகப் பிறந்தோருள் உடல் பொருள் முதலியவற்றான் பிறர்க்கென வாழ்வாரும், தமக்கென வாழ்வாரும் ஆக இரு சார்பாயுள்ள மக்க ளுலகி லுளர். தமக்கென வாழ்வாரை ஒரு நாடும் ஒரு ஏடும் ஒரு நாளும் எண்ணிப் போற்றா. எத்துணையோ உயிர்கள் பிறந்து தமக்கென வாழ்ந்து மடிகின்றன. அவற்றைப் பற்றி யாரும் எண்ணி யறியார். பிறர்க்கென வாழ்ந்த பெருமக்களின் வாழ்க்கை வரலாறே நாட்டு வரலாருக அமைகின்றது.

கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் சார்பில் நாட்டிய கரந்தைப் புலவர் கல்லூரியை நிலை நிறுத்திய பெருமைக்குரியவர்கள் திருச்சி திரு. T. P. வேதாசலம் பிள்ளை B. A., அவர்களின் தந்தையார் திரு. ச. பொன்னுசாமி பிள்ளையவர்களாவார்கள். சிறிய அறம் புரிந்தோர் பேரறம் புரிந்தார் என ஆரவாரத்துடன் செய்தித் தாள்களாலும் அவற்றின் ஆசிரியர்களாலும் புகழ்ந்து போற்றப் பெறுதலை யாமறிவோம்.

இங்ஙனம் போற்றுதலையோ சிறப்பித்தலையோ ஒரு சிறிதும் பொருட்படுத்தாது தமதுதம்பியார் காலஞ்சென்ற ச. பழனிசாமிபிள்ளை அவர்களின் பங்கிற்குரிய ஏறக்குறைய ஐம்பதினுயிரம் (50000) விலை மதிப்புள்ள உடைமைப் பொருள்களைநம் சங்கத்தின் சார்பில் நாட்டிய கரந்தைப் புலவர் கல்லூரிக் குடைமையாக்கித் தம் தமிழ் அன்பினையும் வள்ளன்மையினையும் வெளிப்படுத்தியவரும், திருச்சி வழக்கறிஞர் திரு T. P. வேதாசலம் பிள்ளை அவர்களின் அருமைத் தந்தையாரும் நம் சங்கப் பேரன்பருமாகிய திரு ச. பொன்னுசாமி பிள்ளை அவர்கள் தமது 89-ஆம் அகவையில் 21—2—'46-ஆம் நாள் இறைவன் றிருவடி நீழலடைந்தனர் என்பதனைக் கேட்டு மிக்க வருந்தினேம். இவர்கள் மறைவிற்கு வருந்திய கரந்தைப் புலவர் கல்லூரி மாணவர்களும் ஆசிரியர்களும் கரந்தைத் தமிழ்ச் சங்கப் பெருமன்றத்தில் எம் தலைமையில் ஒரு இரங்கற் கூட்டம் நிகழ்த்தினர். இவர்கள் மறைவிற்கு வருந்தி நம் கரந்தைப் புலவர் கல்லூரி ஒரு நாள் விடுதியளிக்கப்பெற்றது. தமிழைப் புரந்த பெருமகனுகரும், தமிழ்க் கல்லூரியை நிலைபெறுவித்த தமிழ்த்தோன்றலுமாகிய திரு. பொன்னுசாமி பிள்ளை அவர்களின் வரலாற்றினைத் தனியே பொழிலில் விரித்தெழுத எண்ணியுள்ளேமாதலால் இங்கு அவர் வரலாறு குறித்து ஒன்றும் வரையாது விடுத்தனம். தமிழ்மொழி தழைக்கத் தம் பொருளளித்துத் தமிழ்க் கல்லூரியை நிலைபெறுவித்த இப்பெருமகனாரின் இன்னுயிர் இறைவன் றிருவடி நீழலில் இன்புற்றுத் திளைக்க இறைவனை வழுத்தி வணங்குகின்றேம். தந்தையைப் பிரிந்து வருந்தும்அன்பர் திரு. T. P. வேதாசலம் பிள்ளை அவர்கட்கும் அவர் குடும்பத்தினர்க்கும் எமது ஆழ்ந்ததுயரினை அறிவித்துக்கொள்ளுகின்றேம்.

கோ. சி. பெரியசாமிப் புலவர், பொழிலாசிரியர்.

# தமிழும் கலையும்.

திரு. வித்துவான். மு. அரசங்கண்ணனார் அவர்கள் M. O. L.

கரந்தைத் தமிழ்ச் சங்கச் சார்பில் நிகழும் கரந்தைப் புலவர் கல்லூரியின் இளங்கோவடிகள் கழக எட்டாம் யாண்டு நிறைவு விழா குடந்தைக் கல்லூரி விரிவுரையாளர் வித்துவான். **மு. அரசங் கண்ணனார்** M. O. L., அவர்களின் சீரிய தலைமையில் சிறப்புற நிகழ்ந் தேறியது. விழாத்தலைவர் **மு, அரசங்கண்ணனார்** ஆற்றிய சொற் பொழிவு.

தலைவர் அவர்களே! தோழர்களே! வணக்கம். எதிர் காலத்தில் தமிழ் நாட்டிற்கு, தமிழ் மக்களுக்கு நல் வாழ்க்கையினைத் தருதற்குத் தமிழ் கற்றவன்- தமிழாசிரியன் - தமிழ்ப் பண்புடையோன் - தமிழ் அறிவாளி ஆகியோராற்றான் இயலுமென்பதனை யான் அழுத்தந் திருத்தமாகக் கூறுவேன், அருந்தமிழைக் கற்றவர்களாற்றான் வெற்றியடைய முடியும்.

ஒரு சிலர் என்ன கருதுகின்றனர்? தமிழ்ப் பண்டிதர்தானே! என்று இழிவாகக் கருதுகின்றனர், அதைச் சொல்லுவோருடைய நிலை மாறிக்கொண்டே போகின்றது. கேட்பவர்கள் பண்டிதர் இழிவினைக் கேட்பவர் மிகவும் பூரித்தவராக விளங்குகின்றனர். ஆங்கிலம் கற்றவரே உயர்ந்தவராம். அந்த ஆங்கிலத்தின் உயர்வினை யானறிவேன். பி. ஓ. எல். தேர்விற்குரிய மூன்றும் பகுதி ஆங்கிலத் தை இரண்டு திங்களிற் சாறு வேறு சக்கை வேறாக அப்படியே கசக்கிப் பிழிந்தேன். நம் தீந் தமிழிலுள்ள சேனாவரையத்தினைப் பல நாட்களாக - கிழமைகளாக - திங்களாக - ஆண்டுகளாகப் படித் தாலும் கூட அதன் நுண்ணிய கருத்தினை அளவிட்டறிய முடியுமோ? நீங்கள் ஆங்கிலத்தினைக் கற்க ஆரம்பித்தால் மிக மிக எளிதில் வெற்றி பெறலாம் என்பது உறுதி. ஆனால் நீங்கள் சேனாவரையத் தினைக் கற்க முயன்றீர்களே அதுவே போதும்; எனக்கு மட்டற்ற மகிழ்ச்சி; சங்க இலக்கியத்தில் இடறி விழுகின்ற அடிகளிலெல்லாம் தொட்டுக்காணுகின்ற சீர்களிலெல்லாம் இட்டுக்காணுகின்ற தொடை களிலெல்லாம் நீங்கள் நன்கு பார்த்திருக்கலாம் கலையை. அங்குக் கலையின்றி வேறு என்ன காணமுடியும்? ஆங்குச் செறிந்து கிடக் கின்ற கலையினை வரிவரியாகக் காணுந்தோறும், அதன் நுட்பத்தினை யும் திட்பத்தினையும் உணருந்தோறும், யாம் எய்தும் இன்பத்திற் களவேயில்லை. அங்கே தான் கலையினுயர்வைப் பார்க்கலாம். கலையின் செழிப்பினை - கலைமலிந்து கிடக்கின்ற காட்சியினைக் கண்டு மனம் நெக்கு நெக்காக உருகலாம்.

பண்டைக் காலத்தில் இசையை எவ்வாறு போற்றியிருக் கின்றனர்? ஏன் அவ்விதம் போற்றினர்? மக்கள் உணர்ச்சி

யுடையவராயிருந்தனர். இன்று அத்தகைய உணர்ச்சி நாட்டிலில்லை. அதனாற்றான் இன்றும் பேசிக்கொண்டே இருக்கிறோம்.

சங்க காலத்தில் ஒரு பாணன் ஒரு சோலை வழியாகச் செல்கின்றான்; அங்கு ஒரு செடியினில் முல்லை பூத்து நிற்கின்றது; மலர்ந்த வண்ணமாகக் காட்சியளிக்கின்றது; அதிலீடுபடுகிறான்; பிறகு அதன் பண்பையும் - நலத்தையும் - செம்மையினையும் - அழகினையும் - மணத்தினையும் கண்டு வாடுகின்றான்; ஏன்? இம் முல்லையைப் பயன்படுத்துதற்கு யாருமில்லையே என ஏங்குகிறான், எங்கள் தலைவன் உன்னைச் சூடான்; ஏன்? எங்கள் தலைவன் மறைந்தான்; ஆகவே நீ இவ்விதம் வீணாகப் பூத்தனையே என்று ஏங்கிய வண்ணமாய் நிற்கின்றான். இதுவே கலை; ஆம்! உண்மை. (புறம். 242) "பாணன் சூடான் பாடினி அணியாள் வல்வேற் சாத்தன் மாய்ந்த பின்றை முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே" எனக் கூறிக் கவல்கின்றான். பாரிவேந்தன் பறம்புமலையை பலஅரசர்கள் முற்றுகையிட்டனர்; அம்முற்றுகையைக் கண்ட புலவரொருவர் பாரியின் சிறப்புத்தோன்ற, "சுகிர்புரி நரம்பின் சீறியாழ் பண்ணி.........ஆடினிர் பாடினிர் செலினே—நாடுங் குன்றும் ஒருங்கீயும்மே" எனப் பகையரசர்பால் நவின்றனர். பாட்டைக் கேட்டு நாட்டையீயும் கலைப் பண்பினை யாம் என்னென்பேம்! அந்நாள் கலையில் அரசர்கள் இவ்வண்ணம் ஈடுபட்டவர்களாய் இருந்தனர். கலை அவ்வண்ணம் அந்நாளில் செழிப்புற்றோங்கி யிருந்ததென்பதைத் தெள்ளத் தெளியக் காண்கின்றோம்.

**ஓவியம்:—** 17-ஆவது நூற்றாண்டில் கண்டெடுக்கப்பட்ட ஓவியங்களை எல்லோருங் கண்டு களிக்கும் வண்ணம் புகைப்படம் பிடித்து இலந்தன்மாநகரிலிருந்து வருகின்ற கிழமைத்தாளில் வெளியிட்டிருந்தனர். அவர்கள் முன்னேற்றம் அவ்விதம் செல்லுகின்றது. அவர்களுடைய ஆர்வம் அவ்விதம் செய்யச் செய்கின்றது. பண்டைக்காலத்தில் ஓவியச்சித்திரமாகவே வீடுகள் காட்சியளித்தன. "ஓவத்தன்ன இடனுடை வரைப்பு" என இலக்கியங் கூறுகின்றதை நீங்கள் நன்கு அறிவீர்கள்.

இந்தக் காலத்திலும் நன் முறையில் சித்திரந் தீட்டுகின்றவர் இருக்கின்றனர். கைவன்மையிலே மிகுந்த திறப்பாட்டினையுடைய வரையும் நம் நாடு அளித்திருக்கின்றது. ஆனால் அவர்களை முன்னேற்ற—வளர்ச்சியடையச்செய்யச் செல்வர்களோ - அரசியலாரோ விரும்புகின்றனரா? இல்லையே என்று வருத்தத்துடன்தான் அப்பேச்சினை நிறுத்த வேண்டியதிருக்கின்றது.

போர்:—சங்ககாலத்திலே நம் முன்னோர் அறநெறி பிறழாது அறநெறியிலே நின்று போரிட்டிருக்கின்றனர். அஸிரியமக்கள் முற்காலத்தில் வெட்டுவதையும் குத்துவதையும் கொல்லுவதையும் சித்திரவதை செய்வதையுமே தொழிலாகக் கொண்டு,போர் செய்திருக்கின்றனர். ஆனால் நம்பண்டையோர் போர்க்களத்திலே சென்று பகைவனை

வீழ்த்தல் வேண்டும்; இன்றேல் அவன் வாளால் வெட்டுண்டு புறமுதுகிடாது போர்க் களத்தினிலே இறத்தல் வேண்டும் என்ற ஆண்டன்மை உடையவர்களாய் வாழ்ந்தனர். போரிலே இறக்கவில்லை என்றால் வெட்கி நாணித் தலை குனிந்தவர்களாய் இருந்தனர். ஒருவன் போரிலேஇறக்காமல் வீட்டிலே இறந்தானானால் அவனுடலை நீளமான வாளை எடுத்து அவன் உயிரற்ற உடலத்தை வெட்டிப் பிறகு சுடுகாட்டிற்குக் கொண்டுபோய் எரித்தலையோ அன்றிப் புதைப்பதையோ அந்தக்காலத்து மக்கள் விரும்பினர். இறப்பது என்றால் வெற்றி முறையில் இறத்தல் வேண்டும் என்ற உணர்ச்சி மக்கள்பால் மலிந்திருந்ததே அதற்குரிய காரணமாகு மன்றோ?

போர் செய்து செத்துமடிய வேண்டும் என்ற உணர்ச்சியே எழுச்சியே எண்ணமே செம்மையே பண்பாடே வீரமே அவர்களை உயர்ந்த நிலையில் ஆக்கியது என்று கூறினால் அது மிகையல்ல.

இந்தக்காலத்தில் பல்லாயிரக் கணக்கான மக்கள் போர் செய்கின்றனர்; இறுதியில் தோல்வியடைகின்றனர்; பிறகு அவர்கள் எதைத்தோல்வி என்றுகருதுகின்றனர்? பத்திரத்தில், தோற்றவர்கள் கைஎழுத்திடுவதே தோல்வி சரணாகதி என்று கருதுகின்றனர். ஆனால் அந்தக்காலத்திலே ஒருவீரனை நோக்கி ஓர் ஈட்டிவருகின்றது. அவனிடத்திலிருந்த பெரியவாள் இற்றுப்போயிற்று. தன்னைக் காத்துக் கொள்வதற்குரிய கேடகமும் சிதைந்தொழிந்தது. இந்த நிலையிலும் தன் உயிர்போய்விடுமே என்று எதிரி எறிந்த ஈட்டிக்குப் பயந்து வாள் கேடகங்கெட்ட அவ்வீரன் சிறிது கண்ணை இமைப் பானேயாயின் அதுவே தோல்வி என்று வள்ளுவர் கூறுகின்றார்.

பண்டைக்காலத்துத் தமிழர்கள் வீரர்களாகவும் ஆண்மை யுடையவர்களாகவுமே வாழ்ந்திருக்கின்றனர். இந்த நாளைய சண்டையை நாம்யாவரும் நன்குஅறிந்திருப்போம். துப்பாக்கிப்படை பீரங்கிப்படை, டாங்கிப்படை, இவற்றின் மூலமாகச் சண்டை நடந்தன. பகைவரின் முள்வேலிகள் சூழ்ந்த இடத்தில் எல்லாம் டாங்கியைவிட்டு அழித்துப் பிறகு அந்த இடத்தில் காலாட் படையைச் செலுத்திப் போர் செய்திருக்கின்றனர். ஆனால் நம் முன்னோர்களும் பகைவர் முள்வேலியை நீக்கி இவ்வண்ணமாகத்தான் போர் செய்திருக்கின்றனர். நளிகடல் இருங்குட்டத்து, களிறு சென்று களன் அகற்றவும் (புறம்26) முட்கள் நிறைந்த வழியினை நம் மன்னர்களின் டாங்கியாகிய யானைப்படைகள் இல்லாமற்செய்ய, பிறகு காலாட்படைகள் சென்று போர் செய்ததாக இலக்கியம் கூறுகின்றது.

அறிவியற்கலையறிவு தோன்றாத அந்த நாளைய மக்கள் எவ்விதம் போர்செய்திருக்கின்றனர்? இந்தக்காலத்தில் போர்நடந்த சமயத்தில் வெற்றி கரமாகப் பின்வாங்கினர் என்றுதான் நாம் அன்றாடம் அறிந்திருப்போமே! எதிரிகள் தம் பக்கத்தில் வேலியை அமைத்

துப் பகைவர் நுழையா வண்ணம் செய்து கொள்ளுகின்றனர். இக் காலத்து வேலி போல அந்தக்காலத்திலும் நெருங்கத்தகாத முள்வேலி இருந்திருக்கிறது.

"பல் சான்றீரே பல்சான்றீரோ
குமரி மகளிர் கூந்தல் புரைய
அமரில் இட்ட அருமுள் வேலி
கல்லின் பாசறைப் பல்சான்றீரே" (புறம்-301)

எனக் கூறப் பெறுதலால் குமரி மகளிர் கூந்தல் மான அக்காலத் திருந்த பகைவா முள் வேலி இட்டிருந்தனர் என்பது நன்கு விளங்குகின்றது. இம்முள் வேலியை எவன் இட்டானோ அவனை யன்றி வேறு யாராலும் பிரிக்க முடியாது எனுங் கருத்தமையப் பாட்டியற்றிய புலவரின் அறிவின்றிறம் என்னே! திருமணமாகாத பெண்ணின் கூந்தலை வேறு ஒருவனால் பிரிக்க முடியுமா? அவளுக் குரியோன் வந்த பின் அவள் கூந்தலவிழ்த்தல் மான, வேலி யிட்டோனே அதனைப் பிரிக்க இயலும், எனப் புலவர் கருதிக் கூறிய திறன் பாராட்டற்பாலது? தமிழர் வாழ்க்கையை யொட்டியே தமிழ் நாட்டியல்பும் அமைந்து கிடநதது எனப் புலவர் கூறியுள்ளார்.

ஆப்பிரிக்காவின் வட பகுதியில் வெற்றி கிடைத்தது. எவ்வாறு வெறறி கிடைத்தது? ஒரு பக்கம் அட்டை மக்களைக்கொண்டு பொறியின் வழியே போர் செய்தனர்; மற்றொரு பக்கம் வலிமை யுடைய மக்கள் போர் செய்தனர்; இதனாலன்றோ, ரோமல் அப் போர்க்களததில உருண்டு விழுநது ஓடினா. ஏறுபோற் பீடுநடை யுடைய சுபேதார் சுபரமண்யம பணடைய தமிழர் மரபில் பிறந்தவர்; எங்கள் முன்னோர்கள் எத்தகைய ஆண்மையுடையவர்கள் என்பதனை இன்று உலகுக்கு அறிவித்துவிட்டார். இவர் நம் தண்டமிழ் நாட்டிலுள்ள செஙகல்பட்டிலே தோன்றியவர்; உலகம் உவப்ப வீரச்செயலைப் புரிந்தவர்; தங்கப் பதக்கம் பெற்றவர் அன்னார்.

அந்தக் காலத்திலும் போர் செய்து வெற்றி பெற்ற மக்களுக்கு நிலம் முதலானவற்றை யெல்லாம் கொடுத்து உதவும் வழக்கம் இருந் திருக்கின்றது; எத்தகைய நிலம கொடுத்திருக்கின்றனர்? நாட்டிற்காக உணமையாக உழைத்த மக்கள் அலலரா? வீரர்கள் அல்லரா? இவரின் வீரத்தை நன்கு உணர்ந்து மன்னன் நல்வளந்தரும் தண் ணடை கொடுககின்றான்; வீரரும் போரில் திறமபடப் போர் செய்தனர்; உயிரை விட்டனர்; வீர வாழ்க்கையினை விருமபினர். அதனால் செழுமையும் உயர்வும் மேன்மையும் அடைந்தனர்; இவர்கள் நம முன்னோர்கள் என்று மார்பு தட்டுகின்றோம்!

நாள் நட்சத்திரங்கள் முதலானவை யெல்லாம் உண்மையாகத் தமிழருக்கு உணடா? அன்றி வேற்று மொழிகளில் அயல்நாடு களிலிருநது கடன் வாங்கினவா என்றால் இல்லவே இல்லை; வான நூற் புலமையில தமிழர் மிகவும் தேர்ந்தவர்; அதில் தமிழர்கள் பெரிய

வெற்றியினை அடைந்திருக்கின்றனர்; இவர்களுக்கே, உரியதென்று அறுதியிட்டு அறை கூவுவேன்! இந்த ஆக்க வேலையை நாவலர் பண்டித ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள் செய்துள்ளனர். அவர் செய்த தொண்டு நாட்டை விட்டு ஒருகாலும் போகாது. ஆங்கிலம் கற்ற ஒரு சிலரிடம் சென்று சோதிடம் கேட்டால் ஒன்றையும் உண்மையாகக் கூறுவதாகத் தெரியவில்லை, கணிதத்தில் சிறந்து விளங்கியதனுல் கணியன் பூங் குன்றனுர் என்ற பெயராலேயே கணிக்கப்பட்டார் ஒருபுலவர்; தமிழ்ப் பண்டிதனுக்கு என்னதெரியும் என்றுநாக்கில்தழும்பேறும்வண்ணம் கூசாதுபேசுகின்றனரே! இதையெல்லாம் கண்டவன் எவன்? தமிழ்ப் புலவன் என்பதை மறந்தனர் போலும் ! பாவம் அதை விட்டுத் தொலைப்போம்.

ஓடிசையன் தன் மகளிடத்தில் உன்பற் கோட்டையினின்றும், இந்த வார்த்தை எப்படி வந்தன எனக் கூறினுன்; அதற்குச் சிறந்த மொழி பெயர்ப்பு சேக்மன் என்பவனுடைய மொழி பெயர்ப்பேயாம்; அதற்கு வள்ளுவர் கூறும் கருத்து யாது ?

" யாகாவா ராயினும் நாகாக்க.................................
.................பட்டு "

விண்மீன் இயற்கை ஒளியினை யுடையது; கோள்மீன் பிற ஒளியினைக் கொள்ளும் தன்மையுடையது. இதைத்தான் தற்காலத்து விஞ்ஞான அறிஞர்கள் கூறுகின்றனர்; ஆனுல் பண்டைக் காலத்தாராகிய நம் முன்னோர் அந்தக் காலத்திலே இவ்விதம் கூறியிருப்பது சாலவும் சிறப்புடையதன்றே ? இன்னும் " செஞ் ஞாயிற்றுச் செலவும் அஞ் ஞாயிற்றுப் பரிப்பும்' என்று அக்காலப் புலவர் கூறியதிலிருந்து இவை இவ்வளவு என்று நுணுகி ஆராய்ந்து அறுதியிட்டுக் கூறுவது உறுதியாலியன்றசெயல் என்பதை விளக்கியுள்ளார்; இஃதுஉண்மை; ஏன் ? உண்மை உலகத்தில், நன் மக்கள் உலகத்தில் அறிவுள்ள உலகத்தில் வாழ்ந்த மக்கள் உண்மை உடையவர்களாகத்தான் இருந்திருக்க முடியும்! உண்மைப் புலவனை யாம் நம்ப வேண்டாமா ? கட்டாயம் உறுதியாக நம்ப வேண்டியது தான்!

மற்போரிலே சிறந்து விளங்கி நின்றனர்; சொற்போரிலே சிறந்தவர்களாக இருந்திருக்கின்றனர்; குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனைப் பாடும்பொழுது பாடிப் பழஞ்செய்க் கடன் (புறம்-35) வீடுகொண்டபொழுது " நாடெனப்படுவது நினதே பெரும " என்றெல்லாம் அவனைப் புகழ்ந்து கூறிவிட்டுக் கடைசியில் அவனை இடித்துரைக்கும் ஆண்மையுடைய கருத்தினைவைத்துப் பாடு கின்ரூர் வெள்ளைக்குடி நாகனுர். இவற்றை யெல்லாம் நாம் எங்ஙனம் அறிகின்றோம்? வாழ்ந்தார்கள் என்று கேட்பதற்கும், புகழ்வதற்கு மாவது பயன் கிட்டினதே. இனி, ஆங்காங்கே செறிந்து கிடக்கின்ற கலைப்பண்புகளை யெல்லாம் ஒன்று திரட்டி, நாடகக்கலை, இசைக்கலை, ஓவியக்கலை என்று தனித் தனியாக நூல்கள் எழுதுதல் வேண்டும் ?

(தொடரும்)

# 'குற்றம் குற்றமே'

திருவாட்டி. மாசில்லாமணி அம்மையார் M.A.; L.T. அவர்கள்
பெண்கள் கிறித்தவக் கல்லூரி, சென்னை.

(ஒரு சிறு நாடகம்)

## Act I, Sc., I

இடம்:— நந்தவனம். பாத்திரங்கள்:— மாறனும், தேவியும்.

**மாறன்:-** நறுமணங் கமழும் நந்தவ னத்தில்
சிறுபொழு திருந்து செல்வோம், தேவி!

**தேவி:-** தென்னவர் கோனே! மன்னிய வனத்தில்
பன்னிறப் பூக்கள் பல்கிப் பூத்து
விண் ணுல கென்ன வியப்பெழச் செய்யும்
கண்ணினுக் கினிய காட்சிதான் என்னே!

(சுற்றிப் பார்த்து)

**மாறன்:-** மதுரை நகர்கொள் மாட்சியைப் பாராய்
மதுரைப் பதியே மானிலந் தனிலே
துயரைத் தீர்க்கும் அயர்வைப் போக்கும்
வையைக் கரையில் வைகும் இந்நகர்
தையல் பாகன் தங்குதற் கிடமே,
மங்காப் புகழ்கொள் வளநக ரிதிலே
சங்கப் புலவரில் சாலச் சிறந்த
கபிலனும் பரண னும் கீரனும் சாத்தனும்
நவிலரு நற்றொடை நாற்கவி யியற்றித்
தண்டமிழ் நாட்டின் தவப்பயன் என்னத்
தொண்டினை இயற்றும் தோமறு பெரியார்
சங்கப் புலவராம் சான்றோர் புகழே
மங்கா தென்றும்; அங்கே பாராய்!

**தேவி:-** நறுமண முல்லை நசிந்திடு மன்றோ
திருவிழந் தழிந்து தீய்ந்திடு, மன்றோ?
குடிநீ ரற்றுக் கூம்பின தன்றோ?
மடிகொள் சேடியர் மறந்தனர் முற்றும்;
அவர்தமைக் கூவி அறைகுவன் கணமே,
அலர்கொடி முல்லைக் கருநீர் அளிக்கவே.

(தேவி போகிறாள்)

**மாறன்:-** சில்லெனுங் காற்றில் மெல்லிய தோர்மணம்
எல்லையில் உணர்ச்சி எந்தனுக் களித்தது.

நறுமணப் பூக்களில் உறுமணம் அன்றது;
திருவுறை தேவியின் கூந்தல் மணமது
நங்கையர் கூந்தலில் நறுமணம் இஃதோ;
கொங்கலர் கோதைவேய் கோதையர் கூந்தலில்
இயற்கை மணமோ? செயற்கை மணமோ?
என்மனத் தெழுந்த செம்மை வினவிது
நன்மொழிப் புலவர் நாவுக் கிசைய
இதற்குறு விடையை இசையுடன் பாடிடின்,
தக்கதாம் முறையில் திக்கெலாம் சாற்றிப்
பொருந்த வமைந்த பொற்கிழி அவர்க்கே
விரும்பி ஈகுவன் விழைந்தேன் இதுவே.

Act I Sc. II

இடம்:— அரசவை. பாத்திரங்கள்:— மாறன், சங்கப் புலவர்.

**புலவர்கள்:-** வாழி! வேம்பலர் மலர்தார் வேந்தே!
நன்று குகநின் நல்வலம் தேசு
பாண்டிய குலத்து ஆண்டவ! வாழி!
பூண்டநின் மனையாள், புதல்வர் வாழி!
காண்டகு சிறப்பின் காவலர் பெரும!
ஈண்டுன் வருகை வேண்டினம் வாழி!

(ஒருபுறம்)

**கபிலர்:-** மாறன் மனத்தொரு மறுக்கம் பிறந்ததோ?

**பரணர்:-** வேறுபா டடைவதேன்? விளம்புவன் நமக்கு;

**கீரன்:-** மறுக்கம் பிறந்திடில் மன்னன் உரைப்பன்
பொறுப்பீர்; அவன்மனம் புகலுவான் இன்றே

**மாறன்:-** ஆலவாய் அமர்ந்த அன்புடைப் புலவீர்!
கோலநெ டுங்கடல் சூழ்'ரிப் புவியில்
மன்னவன் மனத்தின் மனநிலை உணர்வோர்
துன்னரும் கேள்வித் தூய்மைப் புலவரே
இன்னது உண்மை யெனிலொன் றறைகுவன்
இளமரக் காவின் எழில்கண் டுவக்கத்
தெளிசொல் பாவைத் தேவியும் நானும்
சென்றேம்; கண்டோம் இயற்கையும் செயற்கையும்;
அன்றே கொண்டேன் ஐயம் ஒன்று;
இளமரக் காவில் என்மனத் தெழுந்தே
உளத்துறும் வினவுக் குரியதாம் விடையைக்
கூறும் புலவர் யாரே யாயினும்,
எக்குல மெனினும், எவ்வூ ரெனினும்
தக்கவிக் கிழியைத் தருவேன் உவந்து
நற்கவிக் கெனவே பொற்கிழி யமைத்தேன்.

(பாண்டியன் செல்லுகிறான்)

**புலவர்:-** எங்ஙனம் அறிவோம் எங்ஙனம் உய்வோம்?

**பாணர்:-** இளமரக் காவில் எழுந்ததோர் கருத்தாம்
உளமறிந் தெங்ஙனம் உரைப்ப தவற்கு?

**கபிலர்:-** இயற்கையி னெழில்நிறை இளமரக் காவில்
பயக்குறும் இன்பம் பலப்பல அறிவேன்
கல்லெனும் அருவியும், சில்லெனும் வாவியும்,
கள்ளவிழ் மலரும், சிள்ளெனும் வண்டும்,
ஓங்கிய மரனும், தீங்கனி பலவும்,
எழில்செய் குன்றும், தொழில்நிறை பாவையும்,
மல்லிகை மணமும், அல்லியின் அழகும்,
தாமரைக் குளமும், காவியின் கணமும்,
தாவறு காட்சிகள் தமைநிகர்ப் பனவே
இத்தனை இன்பத் திறைவன் கருத்து
எத்தகை யின்பத் திறங்கிய தறியோம்

**கீரன்:-** எத்தனை பிறவி எடுத்தும் அறியோம்
மனமொரு வழியே மன்னுதல் இல்லை;
கணமும் பல்வழிக் காலென விரையும்
அனையதன் தன்மை தினையள வறியோம்.

**கபிலர்:-** மனையகம் சென்று மன்னவன் கருத்தை
நினைவினில் கொண்டு, புனைவோம் பாடல்!

(யாவரும் செல்லுகின்றனர்)

**தருமி:-** மன்னவன் கருத்தைத் துன்னிய புலவரில்
பன்னுவோன் யாவன் பார்ப்போம் நாளையே.

## Act I Sce. III

இடம்:- அரச சபை.

**புலவர்கள்:-** பாண்டிய வாழி! பழியிலாய் வாழி!
ஈண்டினுய் வாழி! இணையிலாய் வாழி!
பொற்கிழி யமைத்த புலவ! வாழி!
பற்பல சுற்றம் படைத்தாய் வாழி!

**மாறன்:-** என்னவை எழில்பெற இருந்த புலவீர்!
உம்மிசைப் பாடலை உவந்து கேட்பேன்,
உளக்கருத் தறைவீர் உணர்த்துவீ ரிவணே.

**பாணர்:-** புல்லிய என்னுரை புகலுவன் அரசே,
நல்லியல் வாசகம் நவிலவும் அறியேன்
'இளமரக் காவின் எழில்குறித்துக் கோகிலமே
வளம்பாட வல்லையேல் வாழியரோ வாழி!
சளமிலா உன்போல் சற்றே மகிழ்ந்திருக்க
உளங்கொண் டிருப்பன் உவகை தருதியால்!

மாறன்:- புலம்நிறை புலவ! போற்றினன் கவியை!
நலம்நிறை கவியை நவின்றா யெனினும்
என்மனக் கருத்தை இசைக்க விலேயே
உன்மனக் கருத்தை உரைத்தாய் போலும்!

கபிலர்:- இளமரக் காவில் இருந்தாய் நினதின்
உளக்கருத் தறிந்து உரைத்தேன் சிற்றுரை
'பச்சைப் பசுங்கிளியே பாவையரின் சொற்கலந்தாய்
இச்சைவைத் தெங்குற்ருய் இன்னெழிலார் சோலே
விட்டு
நச்சுப் பழமின்றி, நல்லபழம் எங்குமுண்டு,
கொச்சை மொழிகுழறிக் குதூகலிக்க வாராயோ'

மாறன்:- பச்சைக் கிளியைப் பாடிய புலவ!
உச்சக் கவியை உரைத்தாய் அறிவேன்
இன்ன பாவிலும் என்கருத் தில்லே
இன்னும் கேட்போம் எம்கருத் தறிய.

சாத்தனுர்:- பல்பெரும் புலவர் பல்கிய குழாஅத்துள்
நெல்லில் புல்லெனச் சொல்லுவன் சொல்லே
நீனிற மயிலே! நீனிற மயிலே!
கானுறை கலாப நீனிற மயிலே!
தோகையின் எழிலும், பாவையின் சாயலும்
காவினில் ஆடலும், கலாபம் விரித்தலும்
கார்மழை கண்டு களிப்பெழுந் தார்த்தலும்
இளமரக் காவின் எழில்தனைப் பெருக்கவோ?
உளம்தனைக் கூறுவாய் உரைதெரி மயிலே.

மாறன்:- கார்மழை கண்டு களிப்புக் கொள்ளும்
நீனிற மயிலே நினைந்தீர்; நன்று
மயிலின் மீதும் மனஞ்செல வில்லே,
குயிலின் மீதும் குறிசெல வில்லே,
கிளியின் மீதும் களிப்பெழ வில்லே.

நக்கீரன்:- சிறிது மறியாச் சிற்றறி வாளன்
அறையும் மொழிதனை அரசே! கேளாய்!
தேன்றுளி பிலிற்றுந் திங்கமழ் மணஞ்சேர் பூங்காவே
நான்வின வுவன்நீ நவின்றிடு வாய்உவந்
தோர்மாற்றம்;
வானுல கானும் மண்ணுல கானும் வண்ணத்திற்
ருனுனே மானு மேலிடம் உளதோ சாற்ருயே.

மாறன்:- நறிய காவின் நலமதை உரைத்தீர்;
தெரிந்தேன் கவிதை, தெளிந்தேன் உள்ளம்.
என்மனக் கருத்தை எடுத்துரை யாது
பன்மலர்ப் பூங்காப் பல்வளம் உரைத்தீர்;

(புலவரைப் பார்த்து)
நாளையும் இவண்நீர் நாடியே வருவீர்
நாவலர் யாவரும் பாவலர் யாவரும்,
மற்றோர் முறையும் உற்றதோர் பாடல்
மனமுவந் துரைப்பீர் மனக்கருத் தமைத்தே.
(அரசன் செல்லுகிறான்)

தருமி:- (தனிமொழி)
அன்னையும் தந்தையும் என்னைவிட் டகன்றனர்,
ஆதர வற்றேன், ஐயகோ, ஐயகோ;
தேறுதல் கூற யாருமில் தனியேன்.
தேனமர் கொன்றையன் திருவடி யடைந்தே,
யானறை குவனே கோனவன் கூற்றை;
இல்லறம் எனப்படும் நல்லறம் நடாஅத்த
எத்துணைப் பொருளும், இல்லா தேங்கினேன்;
மன்னவன் கட்டிய மாணுறு பொற்கிழி
நன்னிதி யாகுமென் நல்வாழ் வாகும்;
பொற்கிழி தனையே பொற்புடன் பெறவே
எற்கிரங் குவனே ஏழைபங் காளன்;
நாதன் கோவில் நலனுறச் சென்று
காதல் பொங்கக் கருத்துரைப் பேனே.

## Act II Sc. I

இடம்:- சிவன் கோவில். பாத்திரங்கள்:- தருமி, சிவன் (அசரீரி)

தருமி:-அன்றொருநாள் ஆலமர்ந்து அருள்செய்தாய் அருள்செய்தாய்
இன்றெனது இடும்பைதீர்த் தருளாயோ அருளாயோ
முன்னாளில் நின்னடியார் மனமுவக்க வரமீந்தாய்
இன்னாளில் வரமளிக்க எந்தனிடம் வாராயோ
மலையரசன் பாவையைநீ மணந்தனையே மனமுவக்க
உலகில்மணம் பெறுவான்யான் உவந்ததனை அறியாயோ?
மாறன்மனம் களிக்கவொரு மாற்றம்நீ தருவாயேல்
ஏரரசே உன்பெயரை எக்காலும் வழுத்திடுவேன்.

அசரீரி:- தருமி! உனது, பொருமல் தீர்வாய்,
விரும்பி அளித்தோம் வேண்டிய வரமே;
கோவிலின் எதிரில் காவலாய் நிற்கும்
தேவனும் நந்தியின் பாதத் தடியில்
இருந்தது பாடல் எடுத்தது கொண்டு,
பாண்டியற் களிப்பாய் பல்நிதி பெறவே.

## Act II Sc. II

இடம்:- அரசவை. பாத்திரங்கள்:- சங்கப்புலவர், தருமி, மாறன்.

தருமி:- பூமலி யாலவாய்ப் புக்கநற் புலவீர்
தேன்மலி கொன்றையன் திருவடி பணிந்தீர்,
மன்னவன் மனத்து மதிப்பனே பாடல்,

அன்னவன் கருத்தை இன்னது காட்டுமோ?
(பாடலைக் கொடுக்கப் பரணர் பெற்று)

**பரணர்:-** மன்னிய கருத்தும், உன்னிய பொருளும்!
என்னைய வென்பேன், எத்தனை யின்பம்!

**சாத்தனார்:-** தொடுத்த சொல்லும் தோன்றும் எழிலும்
எடுத்த பொருளும் ஏற்கும் ஏற்கும்!

**கபிலர்:-** பாண்டியன் கருத்திப் பாவினில் இருப்பின்
ஈண்டமை பொற்கிழி ஈகுவன் இன்னே.

**பரணர்:-** விழுமிய சொற்பொருள், கெழுமிய வாசகம்
விரும்பியே கொள்வான் விறல்மிகு மன்னன்,
சற்றே தரிப்பீர் முற்றும் பகர்வோம்.

(பாண்டியன் வருகிறான்)

**பாண்டியன்:-** அவையிவண் கூடிய அவைப்புல வீர்நீர்
நவையறு பாடல் நன்கறை வீரே?
வினவுக் குரிய விடைதரு பாடல்
விரும்பி வந்தேன் விரைவுட னிங்கே.

**கபிலர்:-** உன்மனக் கருத்தைத் தன்திருப் பாவால்
அமைத்தனன் ஒருவன் அவணமர் தருமி;
பாவலர் யாமெலாம் பாவினை வியந்தோம்,
கோவுறு கருத்தைக் கொண்டதோ அறியோம்.
(பாடலை அரசனிடம் கொடுக்க)

**மாறன்:-** என்கருத் திருப்பின் எத்தனை யின்பம்!
(பாடலை வாசிக்கிறான்)
'கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி
காமஞ் செப்பாது கண்டது மொழிமோ?
பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற்
செறியெயிற் றரிவை கூந்தலின்
நறியவு முளவோநீ யறியும் பூவே'
உள்ளத் தொளித்த உள்ளக் கருத்தைத்
தெள்ளிய பாவால் தெரித்தனன் தருமி
வளமலர் துழாவும் வண்டினைக் கேட்டான்
அளகம் தன்மணம் அமையுமோ மலர்க்கென,
எம்மலர் தனக்கு மிம்மண மிலையென்
றிப்படிப் பகர்ந்த தொப்புறப் பொருந்தும்;
உவந்தேன், உய்ந்தேன், உயர்ந்தேன் இன்று
உன்னிய கருத்தை உயர்திருப் பாவால்,
உரைத்தோன் பெறுவான் உயர்பொற் கிழியைத்
தருமி வாராய்! பெறுவாய் பொற்கிழி
அரிதோர் பாடலை அளித்தாய் இன்றே
புலவர் யாவரும் புனித மனத்துடன்

இலகு, மண்டபம் இன்னே சென்று
தருமிக் களிப்பீர் தமனியக் கிழியை.

(மாறன் செல்லுகிறான்)

**தருமி:-** பெற்றேன் பேறு, விட்டேன் அருந்துயர்
இற்றே செல்வல், இல்லறம் புகயான்;
மனத்துக் குகந்த மானிய லாளை
இனத்திற் பிறந்த இன்மொழி யாளை
வேதவி திப்படி விரைவினில் மணந்து
கோதறு அறம்பல குறைவற நடத்தி,
மங்கை பங்கனை வணங்கி வாழ்த்தி,
வாழ்க்கையாம் கலத்தை வழுவற நடத்துவன்.

**நக்கீரன்:-** சொற்பொருள் செறிந்த சுவைநிறை பாடலோ?
பொற்புறு பாடலைப் பார்க்க விரும்பினன்
அளிப்பீர் ஒருகணம் அந்தணீர்; பாடலை
ஒளிக்கா துரைப்பன் உள்ள தன்மையை,

(பாடலை வாசிக்க)

**பரணர்:-** வாரீர் பெறுவீர் வளம்பெறு கிழியை
வசையறு பாடல் இசையுறக் கொணர்ந்தீர்!
(தருமி பொற்கிழி அறுக்கச் செல்ல)

**நக்கீரன்:-** நில்நில் செல்லாய், நில்நில் கூறுவன்
சொல்லின் நலத்தில் சொல்லேன் குற்றம்;
உருவிற் சிறிதெனில் உரையிற் பெரிது;
எனினும் குற்றம், குற்றம் பொருளில்;
வசையுறு பாவினை வரைந்தோர் பெறுவரோ
நசையுறு கிழியினை? நன்று நன்று,
பொருளிற் குற்றம் பொருந்துமோ வென்று
அரசன் முன்னிலை அறைகுவன் சென்று

(கீரன் செல்ல)

**கபிலர்:-** (ஒருபுறம்) பொருளிற் குற்றம், புகன்றனன் கீரன்!

**பரணர்:-** தருமிக் கெத்தனை தாங்கொணுத் துயரம்?

**தருமி:-** என்னே விதியே! என்னே சிவனே!
உன்திருப் பாடற் குரைத்தனன் வசையே.

## Act II Sec. III

இடம்:- சிவன் கோவில். பாத்திரங்கள்:- தருமி, சிவன்.

**தருமி:-** ஆலவா யமர்ந்து அருள்புரி இறைவா!
நீல்நிறக் கண்ட நிமலனே! கேளாய்,
அடியற்குப் பாடல் அன்புடன் ஈந்தாய்
கொடியவன் கீரன் குற்றமே கூறினன்,
இழிதனைப் பெருமைக் கழிதுயர் கொள்ளேன்

அண்ணலே! உனது அருட்பெருங் கவிக்கு
ஒண்ணுக் குறையை ஓதிய தற்கே
உற்றேன் உறுதுயர், சற்றும் தரியேன்.

அசரீரி:- 'வருந்தேல் தருமி! வருவோம்' அவைக்கே.

Act. II Sec. IV

இடம் :- சங்க மண்டபம். பாத்திரங்கள் :- புலவர்கள், சிவன்.

கபிலர்:- (ஒருபுறம்) அந்தணன் தருமி, அந்தோ! ஏழை
தந்தையு மற்றான், தாயு மிழந்தான்;
பொற்கிழி பெற்றுப் புகழுடன் செலுமுன்,
சொற்றான் குற்றம் சொன்மொழிப் பாவலன்.

பரணர்:: வருவது யாரவண்? உறுவது யாதோ?

சாத்தனார்:- சங்கப் புலவரின் தோற்றம் கொண்டனன்.

கபிலர்:- கணக்கி லடங்காக் கற்றுச் சொல்லிகள்,
வணக்கம் செய்து இணக்கம் காட்ட
நடந்து வந்தார் நகைமுகம் தவிர்த்து
உடன்று வந்தார் ஒன்னலர் போன்று.

பரணர்:- எத்தனை செருக்கு! எத்தனை பெருமிதம்!
இத்தகைப் பெருந்தகை இதுவரை கண்டிலம்!

சாத்தனார்:- ஏதோ காரணம் இவரிவண் வந்தது?

நக்கீரன்:- என்மனம் ஏனோ இங்ஙனம் பதைப்பது?
இடதுறு கண்ணுக் கிடையறாத் துடிப்பு;
துயரம் எதுவும் துண்ணென வருமோ?

சிவபிரான்:- "கொங்குதேர்" எனயாம் இங்கொரு பாடல்
குலமிகு தருமி குறையறக் கொடுத்தோம்
குற்றம் கண்டவன், கூறுக யாவன்?

கீரன்:- யானே கூறினன்?

சிவன்:- யாதோ குற்றம்?

கீரன்:- பொருளிற் குற்றம்!

சிவன்:- பொருள்இல் குற்றம்!

கீரன்:- கோலிழை மாதர் கூந்தற் றெருகுதிக்
கோதிய நறுமணம் ஒவ்வா தன்றோ?

சிவன்:- கருதிய தென்னை? அறுதியாய்க் கூறுக.

கீரன்:- மங்கையர் கூந்தலில் மருவிய நறுமணம்
மன்னிய பூக்களின் மணமே ஆகும்;
எண்ணியே அறிவீர் இயற்கை அன்று.

சிவன்:- மகளிர் கூந்தலில் மணமிலை என்றாய்?

கீரன்:- அதுவே கூறினன் ஆம் ஆம் இலை இலை.

சிவன்:- கற்புடை மங்கையர் கருநிறக் கூந்தலில்
பொற்புறு நறுமணம் பொருந்துத லிலையோ?

கீரன்:- இல்லை இல்லை என்றும் இல்லை.

சிவன்:- தெய்வ மங்கையர் மைந்நிறக் கூந்தலில்?

கீரன்:- பொய்தனைக் கூறேன் மெய்யே இல்லை.
(சிவன் சடை முடியைக் காட்டி)

சிவன்:- உலக மீன்ற உமையாம் அன்னை
உண்மையில் அவள்திரு பெண்மைக் கழகாம்
எழிலுறு கூந்தலில் இயல்மண மிலையோ?

கீரன்:- இல்லை இல்லை, இல்லை அங்கும்.

சிவன்:- யாது கூறினாய்?

கீரன்:- வாய்மை கூறினன்.
(சிவன் நுதற் கண்ணைக் காட்டி)

சிவன்:- வல்லையேல் நின்று வாதம் புரிதி!

கீரன்:- நெற்றிக் கண்ணும் நெருப்புமிழ் கண்ணும்
சுற்றும் சடையும் சூள்எனக் கொண்டாய்;
கண்ணுக் கஞ்சேன் கலங்கேன் நானே,
விண்ணுக் கஞ்சேன் விளம்பேன் பொய்யே,
அண்ணலே! ஆயிரம் கண்ணெனில் அஞ்சேன்
குற்றம் குற்றமே! குற்றமே பொருளில்!

சிவன்:- உலக மீன்ற உயர்திருப் பாவையை
அலகிலா அருட்சுடர் அன்னையாம் அவளை
வாயால் வசைமொழி வழங்கினாய் அன்றோ;
காவா வாய்க்கு ஆவன பெறுவாய்
இழிவுறு நோயை இன்றே பெற்று
இகத்துள சுகத்தை இழப்பாய் எனினும்
கயிலை சென்று காணில்
மயலறப் பெறுவாய் மறுமை இம்மையே.

---

திருவாளர்,

## இராவுபகதூர் N. சிவராசு, B. A., B. L., M. L. A., அவர்கள்

கரந்தைத் தமிழ்ச் சங்கத்திற்கு வந்தஞான்று

சங்கத்தார் மகிழ்ந்தளித்த

# இயன்மொழி வாழ்த்து.

---

திருவள்ருஞ் சென்னையினில் திராவிடரின் தலைவரெனத் திகழுஞ் செம்மல்
மருவுபெருஞ் சட்டமெலாம் மயக்கறவே வகுத்துரைத்து வயங்கு சென்னைக்
கருவளரும உயர்சட்டக் கல்லூரி ஆசானுக் காட்சி தந்தங்
கொருவனவன் சிவராசென் றுரைக்கமுனம் புகழ்பொறித்த உரவோய் ! வாழி !!

சென்னையினிற் சட்டங்கள் சீருறவே வகுத்தமைக்கும்* சீர்மன் றத்தே
முன்னையநாள் உறுப்பினரா முதன்முறையா நின்றனையே முன்னி நின்று
தன்னலமொன் றறியாத தகுநீதிக் கட்சியினற் றலைவர் வேண்டி
நன்மையுற நியமிக்க நன்றூற்றிப் புகழ்பொறித்த நல்லோய் ! வாழி !!

வடபுலமார்ந் துயர்சட்டம் வகுக்குமிந்தி யாசட்ட மன்றத் ii துள்ளே
வடவர்களும் வியந்துரைக்க வழக்குரைகள் ஆய்ந்துரைக்கும் வண்மையாள !
‘ அடகெடுக ! தாழ்ந்தவரார்? அறிஞர்சிவ ராசனைப்பார் அகிலத் துள்ளே
நடைமுறையில் அவரினுமார் ? நவில்க’ என உரைக்கவரு நல்லோய்! வாழி !!

தன்னாட்சி மன்றத்தார் சழக்கினையுங் கடந்தவரைச் சாடி வீழ்த்தி
மன்னாட்சி சென்னைநகர் மன்றத்தின் றலைவனென வயங்கா நின்றோய் !
நின்னாட்சித் திறனெல்லாம் நிறுத்தோர்ந்து மன்னரவர் நீணி லத்தே
துன்னாரு மிராவுபக தூரென்னும் பெயர்தந்த தோற்றம் நன்றே !

எதிர்காலத் திந்நாட்டின் ஈடில்லாத் தலைவனென இலங்க நிற்போய் !
உதிர்காலத் துதிர்தழைகள் ஒலிப்பனபோல் எதிர்ப்பொலியிங் கொலித்திட்
அதிர்தலிலா ஆண்மையுடன் ஆற்றலுடன் செயலாற்றி அவனி போற்ற [டாலும்
எதிர்காலத் திந்நாட்டோர் எணத்தொண்டே எணிப்புரியும் ஏந்தல் ! வாழி !!

---

* Madras Legislative Assembly.

ii Central Assembly.

நாட்டினிலே தற்காப்பை நாட்டவென அரசியலார் நாட்டி யுள்ள
தேட்டமுறும்* பேரவையின் திகழுறுப்பா யமைந்துபணி சிறக்க வாற்றும்
நாட்டமிகு நல்லறிஞ ! நாட்டிலுறு தாழ்ந்தவர்க்கா நாட்டி யுள்ள
ஈட்டமிகு இந்தியநல் இருக்கழகத் துயர்தலைவ ! o இனிது வாழி !!

தாழ்ந்தவர்க்காம் தனித்தொகுதி சால்புறவே நன்றென்னச் சாற்றி முன்னாள்
ஆழ்ந்தசில கருத்துரைத்திங் கதற்கான முயற்சிபணி ஆற்றி னின்றோய் !
வாழ்ந்திடுவோர் எளியவர்கள் வரன்முறையில் அவ்வமைப்பு மாண்பே யென்று,
சூழ்ந்துணர்ந்து மீண்டுமந்தத் தொகுதிபெறத் தொண்டாற்றுந்தோன்றல்வாழி!

அரசியலிற் சீர்திருத்தம் அமைக்கவென இந்நாட்டிற் கமைந்த தூய
துரிசிலவாஞ் சீர்திருத்தந் தூய்தாக்கச் சிலர்தம்மைச் சூழ்ந்து வேண்டும்
வரிசையினில் நினையழைக்க மன்னரினற் பொறுப்பேற்றோர்மதித்துக்கொண்டால்
குரிசில் ! நின குணஞ்செயலைக் கூறுதற்கிங் கெவன்வல்லேம் ! கூற லென்னே!

திண்ணியநற் கருத்துகளைச் சீர்பெறவே உரைக்குமொரு சீர்மை தன்னை
நுண்ணியநல் லியல்பாக நூனெறியில் உரைத்துவரும் நோன்மை யாட்டி
பண்ணியலார் நின்மனையின் பாங்காருந் தொண்டினையும் பகர கில்லேம் !
எண்ணிலவாம் பல்லூழி இனிதுறநின் மனைமக்கள் இனிது வாழி !

வாழிதிரு சிவராசு வாழியிவர் மனை,மக்கள் வாழி வாழி !
வாழியிவர் புரிதொண்டு வளங்கொண்டு மக்களெலாம் வாழ்த்த நன்கு
வாழியிவர் உயர்பதவி வண்மையுறப் பெற்றுயர்ந்து வாழி வாழி !
வாழியிவண் கரந்தைநகர் வளர்சங்கம் என்றென்றும் வாழ்க மாதோ !

கரந்தைத் தமிழ்ச் சங்கம்,
தஞ்சை,
22—1—'46.

இங்ஙனம்,
A. Y. அருளாநந்தசாமி நாடார்,
சங்கத் தலைவர்.

---

* Indian National Defensive, Council.
o Leader, All India Scheduled Castes Federation.

---

## மதுரை, கத்தோலிக்க சேவாசங்கத்தின் சார்பில் நிகழ்ந்த வீரமாமுனிவர் ( Rev. Fr. C. J. Beschi ) நினைவுநாள் விழாவில் கரந்தைத் தமிழ்ச் சங்கத்தார் கூறிய

# இயன்மொழி வாழ்த்து.

மழைதோயு மாடங்கள் மலிமதுரை மாநகர்க்கண் வதிவோ ராய
இழைபுகழார் நலன்விளக்கும் இனியகத்தோ லிக்கமத மியைந்தோர் கூடி
விழையுநலன் பலவிளைத்த வீரமா முனிவரினல் லிருநாளைக்
குழையுமனத் துடன்நினைந்து கொண்டாடல் நன்றவரின் கொள்கை வாழி!

திருவளரும் இத்தாலி, சீர்நாட்டிற் றோன்றிவளன் சிறக்க வென்றே
மருவுபெரும் நூலாய்ந்து மன்னுதிரு வவைசார்ந்து மதிப்பே பெற்று
முருகொளிரும் இந்நாட்டை முன்னாளில் வந்தடைந்த முனிவ னல்லோன்
பெருமைதரு தமிழ்வளர்த்த பேராளன் பெருநாள், சீர் பெருகி வாழி!

தமிழ்மொழியின் சீர்த்தியினைத் தமிழர்களே யுணர்மினெனச் சாற்று வான்போல்
தமிழ்மொழியில் புலமைகொடு தகுதேம்பா வணியியற்றித் தந்தான் மேலும்
தமிழ்மொழிக்கிங் கில்லாத சதுரகரா தியுமியற்றித் தந்தான் சான்றோன்
தமிழ்மொழியி னிலக்கணமே சாலவுந்தொன் னூலியற்றித் தந்தான் வாழி!

திருக்கறுக்கும் திருவாட்டி, திருக்காவ லூர்த்தாயின் றிருக்கண் ணேறுக்கால்
உருக்கமுடன் றிருக்காவ லூர்க்கலம்ப கந்தனையும் உவக்கத் தந்தான்
பெருக்கெனநற் றமிழ்த்தேனைப் பெருவளவன் கதையினிலே பெருக [விட்டோன்
திருக்குறளின் அறம்பொருட்டேன் செறியவிலத் தீன்மொழியிற் செறித்தான் [வாழி!

இத்தேரி யம்மானை யிளர்ந்திங்கே ஏசுவினற் கிளர்ச்சி மிக்க
ஒத்தோர்ந்த கொள்கையினை உலகினருக் குணர்த்தியநல் லூரவோன் மேலும்
எத்தேயத் தோருநனி இறைஞ்சுமரி யம்மையினை யிறைஞ்சிப் போற்றும்
அத்தனினல் லனையமுங்க லந்தாதி படைத்தளித்த அண்ணல் வாழி!

இத்தகுநல் லியல்நூல்கள் எழுதியவர் இத்தாலி இயல்நாட் டுள்ளே
வித்தகமார் விறலாரும் வெனிசுமண் டிலத்தோன்றல் விளங்கு சீரார்
முத்தனைய வீரமா முனிவரெனின் நாமெல்லாம் முன்னி என்றும்
அத்தகைய மேனாட்டார் அறிஞரிவண் வருகவென்பேம் அவர்சீர் வாழி!

உலகிலே பெறுமளவும் உரன்வீர மாமுனிவ ரோர்ந்து செய்த
நலநூல்கள் நிலைத்திருக்கும் நல்லோர்கள் புகழ்ந்திடுவர் நாடு போற்றும்
பலநலவாம் நலன்விளையும் பண்போங்கும் இவர்நூலால் பாரி னூடே
அலகிலவாம் உயிரன்பு அறந்தழைக்கும் இவர்புகழே அமைந்து வாழி!

சொல்லரிய துன்பினையே தொல்லுயிர்க்கா ஏசுபிரான் சூழ வேற்றுப்
"பல்லுயிர்க்கும் நீஇரங்காய் பரனே"யென் றந்நாளிற் பரிந்து வேண்டிச்
சொல்லரிய சிலுவையினில் தொல்லுயிர்நீத் தாரெனயாம் சொல்லக் கேட்டேம்
அல்லலுற வணங்கிங்கே அவர்போன்றே பணிபுரிந்த அறிஞன் வாழி!

வாழிதிருவீரமா முனிவர்திரு நாளமைத்து மகிழ்ந்து ஈண்டிச்
சூழுபுகழ் மிக்குயரச் சூழ்ந்துநலச் செயலாற்றும் தோன்ற லானோர்
வாழியரிவ் விழாசிறக்க வந்திருந்தோர் உரைநனியும் வழங்கி நின்றோர்
வாழியநல் வீரமா முனிவர்புகழ் என்றென்றும் வாழ்க மாதோ!

கரந்தைத் தமிழ்ச் சங்கம்,
தஞ்சை,
3—2—'46.

இங்ஙனம்,
A. Y. அருளாநந்தசாமி நாடார்,
சங்கத் தலைவர்.

---

இப்பாக்களை இயற்றியவர் பொழிலாசிரியர், கோ. சி. பெரியசாமிப்புலவர்.

# தொண்டின் பெருமை.

ச. கணபதி, ஆசிரியர், பெருநிலக் கிழவர் உயர்நிலைத் துவக்கப்பள்ளி, துறையூர்.

(முற்றொடர்ச்சி: துணர் உக, மலர் ம, பக்கம் 297.)

2 அடியார் தொண்டு:— கடவுள் அன்பர்களே அடியார்களாவர். உலகத்திலுள்ள பல்வேறு சமயங்களிலும் அடியார்கள் உள்ளனர். அவ்வடியார்களில் இந் நாட்டைப் பொறுத்தவரை இடைக்காலத்தில் சிவனடியார், வைணவ ஆழ்வார் முக்கியமானவர்களெனக் கருதப்பட்டார்கள்; அரசர்களாலும் நன்கு மதிக்கப் பெற்றார்கள்; பொதுமக்களாலும் போற்றப் பட்டார்கள். அக்காலத்தில்தான் அடியார் பெருமை, அவர்க்குச் செய்யும் தொண்டு முதலிய செய்திபற்றி அடியார்களால் அடியார் உயர்வு குறித்துப் பாடப்பெற்றன சில பாடல்கள். அவைகளில் இரண்டொன்று காட்டி மேற்செல்வாம். நாயன்மார் நால்வருள் ஒருவரான சுந்தரமூர்த்தி நாயனார் 'தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கு மடியேன்' என்று துவங்கி அவர்காலத்திய அடியார்கள் அவர்காலத்திற்கு முன்புள்ள அடியார்கள் முதலியவர்களைத் தனிஅடியார், தொகை அடியார் என்று பல பிரிவாகப் பிரித்து அவர்களுக்கெல்லாம் 'அடியேன்' 'அடியேன்' என்று தன்னைக்கூறிச் செல்கின்றார். திருவிளையாடற் புராணத்தில் விருத்தகுமாரபால ரான படலத்தில் 'சிவனடியார்தமைக்கருதாச்சிந்தையே இரும்பு, மனம் செவி கண்ணாதி அவனடியாரிடைச் செலுத்தா வாக்கையே மரம்' எனப் பரஞ்சோதி, அடியார் பெருமையைக் கூறிச் சென்றார். பெரிய புராணத்தில் எத்துணையோ அரசர்களும், செல்வர்களும் சிவனடியாரை அமுது செய்வித்தே, பிறகு தாங்கள் உணவுகொள்வது என்ற கொள்கையை மேற்கொண்டு அவ்விதமே நடந்தும் வந்திருக்கின்றார்கள். அவை விரிப்பிற் பெருகும்.

நிற்க, பிற்காலத்து ஔவையார் 'இறைவன் தொண்டர் உள்ளத் தொடுக்கம், தொண்டர் தம் பெருமை செப்புதற்கரிது' என்று செப்பிச் சென்றார். இவ்வாறு அடியார்களைக் கடவுளெனவே கருதி அவ்வடியார்கட்கு உணவு, உறையுள், உடை முதலியன ஈந்து அவர்கட்குத் தொண்டு செய்து வந்திருக்கின்றனர் நம் தமிழ் நாட்டு மக்கள். அக்காலத்து மக்கள் அறிவு அக்கொள்கையில் தோய்ந்திருந்ததால் அவ்வாறு தொண்டு செய்து வந்துளர்.

3. சமயத்தொண்டு:— இதைப் பற்றிய செய்திகள் இரண்டாவதாகக் கூறிய அடியார் தொண்டிலேயே பெரும்பாலும் விரவி வந்துள்ளன. சமயத்தலைவர்கள், பெரியார்களே அடியார்கள் எனப் படுவர். அரசன் எச்சமயத்தைச் சார்ந்திருந்தானோ அச்சமயமே

அவன் காலத்து, சிறந்த சமயமாகக் கருதப்பட்டு வந்தது. அரசனும் மற்றைய சமயங்களை இகழாது மதித்து வந்தாலும் தான் பின் பற்றிய சமயத்திற்கே தனி உயர்வு காட்டி வந்திருக்கின்றான். இது ஒருபொது வானவிதியாக உலகின் எல்லா இடங்களிலும் நடந்தேறி வந்திருக்கின்றது சிலபல அரசர்கள் மற்றச் சமயத்தினர்க்குக் கொடுமையும் இழைத்திருக்கின்றார்கள். இந்நாட்டில் சேர, சோழ, பாண்டிய, பல்லவ அரசர்கள் சமயவளர்ச்சி கருதி மிகுதியான கோயில்களுக்கும் அந்தணர்களுக்கும், நிலங்களை மானியமாக விட்டும் தேவாரம் பாட வல்லுநர்களைக் கோயில்கட்கு நியமித்துக் காப்பாற்றியும் வந்தமை நம் நாட்டிலுள்ள கல்வெட்டு, செப்புப் பட்டயங்களால் நாம் நன்கு அறிகிறோம்.

4. அடுத்து நிற்பது மொழித் தொண்டு:— மக்கள் உள்ளக் கருத்துக்களைத் தெள்ளிதின் விளக்க மொழி இன்றியமையாதது. உலக மக்கள் பல இனத்தவர்களாகப் பிரிந்து பல்வேறு மொழிகள் பேசுகின்றார்கள். அவ்வாறுள்ள இனத்தவரில் தமிழர் ஓரினத்தவராவர். இவர்கள் பேசும் மொழி தமிழ்; இத்தமிழ் மொழி உலக முதன் மொழிகளில் ஒன்றாய் இன்றும் நின்று நிலவி வருகின்ற ஒரு உயர்தனிச் செம்மொழியாகும் இதன் பெருமை விரிப்பிற் பெருகும். இத்தகு சீரிய மொழி ஆதியில் தனித்தமிழ்ப் பண்புடனே இயங்கி வந்தது. புலவர் 'கன்னிப் பருவத்தில் அந்நாள் என்றன் காதில் விழுந்த திசை மொழியெல்லாம் என்னென்னவோ பெயருண்டு அவை யாவும் அழிவுற்றிறந்தன கண்டீர்' என்று தமிழன்னை கூறும் கூற்றாகக் கூறுகின்றார். அதன்படி தமிழ்மொழியை அழித்தொழிக்க நினைத்த மொழிகள் எத்துணையோ இறந்து நிற்க, தன் மூவா இள நலத்தோடு தமிழன்னை இன்றும இருந்து வருகின்றாள். பாரதி பாடியதைப்போல் தெருவெல்லாம், ஊரெல்லாம் உலகமெலாம் தேமதுரத் தமிழோசை பரவும் வகை செய்தல்வேண்டும்.

தமிழர்கள் தமம் மொழிக்குச் செய்யும் தொண்டுகள் கணக்கிலவாதல் வேண்டும். வீடு தோறும் தமிழ்க்கலையின் விளக்கம் ஏற்படச் செய்தல் வேண்டும். 'வீதிதோறும் இரண்டொரு பள்ளி; நாடு முற்றிலும் உள்ளன ஊர்கள் நகர்களெங்கும் பலப்பல பள்ளிகள்' நிறுவி ஆங்கெல்லாம் தமிழ்க் கல்வியைப் பரப்புக; தமிழ்மொழி கற்று வல்லுநராயபின் பிறமொழிகளையும் கற்றுத் தேர்ச்சி பெறுக; பிறமொழி நூல்களைத் தமிழ் மொழிப் படுத்துக; தமிழ் மொழி நூல்களைப் பிறமொழியிலாக்குக ; தமிழ் நாட்டிலுள்ள சிற்றூர்கள், பேரூர்கள், நாடுநகர்கள், பட்டி பட்டினங்கள் முதலிய பல்வேறிடங்களிலும் தமிழ்ச்சங்கங்கள் (கழகங்கள்) நிறுவுக; பழைய சங்க இலக்கியங்களோடு இக்காலத்திய புரட்சிக்கவிகள், உயிர்க் கவிகள், சீர்திருத்தப் பாடல்கள், நாட்டுப் பாக்கள், மொழிப் பெருமை பாக்கள், அரசியல், பொருளாதாரம், சமூகம், கைத்தொழில், வாணிபம் முதலிய பல்வேறுவகைத் துறையைப் பற்றிய பாக்கள், உரைநடைகள், நாடகங்களை அச்சிட்டுக் குறைந்த விலைக்குக் கொடுத்தும், சிலவற்றை இலவசமாக வழங்கியும் தமிழ் மொழியைப் பரப்புக;

முடங்கல் எழுதுங்கால் தமிழ் மொழியிலேயே எழுதுக; நண்பர்களிடை உரையாடுங்காலததும், சொற்பொழிவாற்றும போதும் கூடுமானவரை, செந்தமிழையே பயன் படுத்துக; ஆடவர், பெண்டிர், சிறியர், முதியர், செல்வர், ஏழை முதலிய அனைவரும தமிழ் மொழி கற்று புலமை பெறுக; அயலநாடுகளிலும இம்மொழியைப் பரப்புக. நம தாய் மொழியாம் தமிழ் மொழியையே அரசியல் மொழியாக்க, முதன் மொழியாக்க, நாட்டு மொழியாக்க முயலுக! இவ்வாறுய பணிகள் நிகழ்தற்கு, செலவர்களும, கைகொடுத்து உதவ வேண்டும். 'எளிமையினுல ஒரு தமிழன் படிப்பிலலை என்றுல் இங்குள்ள எல்லோரும நாணிடவும வேண்டும்' என்ற பாரதிதாசன் பாடலைக் கேட்டும, தமிற்மக்களுள் எததுணையோ போ ஏழ்மை நிலை யால் படிப்பில்லாதிருத்தல் ஏலுமோ? கூறீர்!

பலப்பல எண்ணிறந்த தமிழ்க் கல்லூரிகள் நாட்டின் பல பகுதிகளிலும் தோற்றுவிக்க! தமிழா மடங்களையும், சத்திரம, சாவடி, கோயிலகளையும தமிழ்க் கலலூரிகளாக மாற்றுக! முழங்குக முததமிழ! 'தமிழுண்டு! தமிழ மககளுண்டு! இன்பத் தமிழுக்கு நாமும செய்வோம நல்ல தொணடு! தமிழ எனறு தோள் தட்டி ஆடு —நலல தமிழ் வெல்க! வெல்க என்றே தினம் பாடு!' என்ற புரடசிக் கவியின பாடலைக் கேட்டுக கொணடு இருந்தும இன்னும உறங்க லாகுமா? உடன் விழித்தெழுவாய்! காலந்தாழத்துவதில பயனிலை.

பிறமொழிச் சொற்களை இன்றியமையாத காலத்திலேயே நம் தமிழமொழியில் சேர்த்தல் வேண்டும்; அவ்வாறு சேர்த்தாலும பிற மொழிச் சொறகளை அம்மொழி உருவோடேயே சேர்க்காது தமிழ் ஒலி கொடுத்து மாற்றித் தமிழ இயல்பிற் கேற்பவாக்கிச் சேர்க்க. நம தமிழ் மொழியில் சொற்கள் இல்லாத விடத்தும், இன்றியமையாத இடததுமே பிறமொழிச் சொற்களை எடுத்துக் கொளளல் வேண்டும. ஏனைய இடத்தும, காலததும தனிச் செந் தமிழ மொழியிலேயே பேசியும எழுதியும வரல் வேண்டும். மேற் கூறிய இவ்வாறுறுனும இன்னும இவைபோன்று கூருது விடுத்த பலலாற்றுனும இயற்கை அழகோடு மிளிரும் தமிழனனைக்குச் செயறகை அணிகலன்கள் பல செயது பூட்டி, கணடு மகிழ்நது தமிழ் மொழித தொண்டைத தவருது செயது நாளும நாமும வாழ்வில் உயர்வோமாக! இனறு மொழிததொண்டாற்றும் பணியில் முதலிடம் பெறுவது கரநதைத் தமிழச் சங்கக் கல்லூரியே யாகும.

அன்றியும, அண்ணுமலைப் பலகலைக் கழகம், திருவையாற்று அரசா கலலூரி, மதுரைத தமிழ்ச் சங்கம், மேலைச் சிவபுரி சன்மார்க்க சங்கத்தைச் சேர்ந்த கணேசா ஒரியண்டல தமிழ்க் கல்லூரி, மயிலம் தமிழக கலலூரி, திருபபனந்தாள தமிழ்க் கல்லூரி எனுமிவைகளும் இயன்றவரை மொழித் தொண்டு செய்து வருகின்றன. திருப்பனந்தாள மடாதிபதி காலஞ்சென்ற திரு. காசிவாசிசுவாமிநாததத்தமபிரான் அவாகள் வித்துவான் முடிவு வகுப்பில் முதன்மையில் தேறிய மாணவருக்கு ஆயிரம் வெண்பொற்காசுகளை ஆண்டு தோறும்

பரிசாக அளித்து இயற்றமிழ் வளர்ச்சிபெறவும் அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் நடைபெறும் இசை வகுப்பிற்குப் பொருளுதவி புரிந்து இசைத்தமிழ் வளர்ச்சியுறவும் ஏற்பாடு செய்தார். பல தமிழ் நூல்களை அச்சிட்டு இலவசமாக வழங்கியும் மொழித் தொண்டு செய்தார். இச்செயல்கள் போற்றுதற்குரியன,

இச்செயல்களைக் கண்ணுறும் தனிப்பட்ட பெருநிலக்கிழவர் (Zamindars) பெருஞ் செல்வர், மடாதிபதிகள், அறநிலையம், கோவில் முதலியவற்றின் தலைவர் ஆகிய அனைவரும் இன்னும் ஏனையோரும், முற்கூறிய கூற்றுக்களை எண்ணிப் பார்த்து மொழித் தொண்டு புரிய முன்வரவேண்டுமென வேண்டிக்கொள்கிறேன்.

5. நாட்டுத்தொண்டு:— பற்பல காலத்தில் பற்பல தொண்டுகள் அவ்வக்காலத்திற்கேற்ப இருந்த நிலையில் மக்கள் உள்ளப் போக்கை ஒட்டி நலனமையச் செய்யப் பெற்று வந்தன என்பதை ஒருவாறு விளக்கினேம். அதே நிலையில் இன்று நம் நாடு இருக்கின்ற நிலை அடிமை நிலையாகும். மக்கள் உள்ளப்பாங்கு அவ் வடிமைச் சங்கிலியை முறித்தெறிந்து விடுதலை வீரர்களாய், தன்னரசு பெற்று நிற்பதில் ஒன்றி நிற்கிறது. நாடு விடுதலை பெறவேண்டும் என்ற கருத்தில் இந்நாட்டிலுள்ள பல்வேறு அரசியல், சமுதாய, பொருளாதாரக் கட்சிகள், ஏனைய கட்சிகள் அனைத்தும் ஒரு சிறிதும் வழுவியவை என்று சொல்ல முடியாது. இந்நாட்டிற் பிறந்த அனைவர்க்கும் அடிமை வாழ்வினின்றும் விடுதலை பெற விருப்பம் உள்ளது. ஆனால் அவரவர், அவ்வக் கட்சிகள் செல்லும் போக்கில் சிறிது வேறுபாடு இருக்கலாமே தவிர முற்கூறிய கருத்தில் எவருக்கும் மாறுபாடு இல்லை, ஆகையால் தமிழ் நாட்டின் நன்னிலைக்கு யாம் உழைப்போமாக.

6. அடுத்து ஈற்றில் நிற்பது பல்வகைத் தொண்டாகும். இதைக்கூறி இக் கட்டுரையை முடிப்பாம். தொண்டுகள் பலவற்றுள்ளும் சிறந்த தலையாய தொண்டு பிறர்க்குதவி புரியும் பேரின்பத் தொண்டாகும். உடல்,பொருள், ஆவி முதலிய பல்லாற்ருனும நாம் பிறர்க்குதவி புரிதல் வேண்டும். அவ்வாறு பிறர்க்குதவி புரிதலே அறமாகும்; நம் கடமையுமாகும். பிறர்க்குதவி புரிதல் எனும இதனுள்ளும் தலைசிறந்த தொண்டு 'காணர், கேளார், கால் முடப்பட்டோர், பேணுநர் இல்லோர், பிணிநடுக் குற்றோர்' முதலிய உறுப்புக்குறைவினர்களை உணவு, உறையுள், உடை தந்து காப்பாற்றுதல் ஆகும்.

இரவலர்கள் புரவலர்களை அடுத்து நின்று இல்லை யென்று சொன்னால் புரவலர்களும் இல்லை யென்னும் அச்சொல்லையேசொல்லி அனுப்பாமல் இயன்றவரை ஈந்தனுப்பல் வேண்டும். இதனையே வள்ளுவர்

'இலனென்னும் எவ்வம் உரையாமை ஈதல்
குலனுடையான் கண்ணே யுள'

என்றும்

ஈத்துவக்கு மின்பம் அறியார்கொல் தாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்

என்றும் கூறிச்சென்ருர்.

பிறர்க்குதவி புரிதலின் பெற்றிமையை இச் செந்நாப்போதாரே ஓரிடத்தில் 'தாம் இன்புறுவது உலகு இன்புறக்கண்டு காமுறுவர் கற்றறிந்தார்' எனக்கூறிப் பிறர்க்கு உதவி புரிந்து அதனுல் ஒரு இன்பம் பெறுவர் பெரியோர் என்று கூறுகின்ருர். குமரகுருபரர்

'பிறர்க்குதவி செய்யார் பெருஞ்செல்வம் வேறு
பிறர்க்குதவி ஆக்குபவர் பேறும்—பிறர்க்குதவி,
செய்யாக் கருங்கடனீர் சென்று புயல்முகந்து
பெய்யாக் கொடுக்கும் பிறர்க்கு,

என்று இயம்புகின்ருர். அப்பரடிகள்

'என் கடன் பணி செய்து கிடப்பதே'

என்றும்

'தொண்டலாற்றுணையுமில்லை'

என்றும் தொண்டின் பெருமையை மிக அழகாகக் கூறிச் சென்ருர்.

பிறர்க்குதவி செய்தல் என்ருல் என்ன? எவ்வாறு பிறர்க்குதவி செய்தல் எனின், குளிர், பனி, காற்று, வெயில், மழை முதலிய இயற்கை நிலைகளின் வேறுபாட்டால் மக்கள் இன்னலுறுங்கால் அவர் துன்பம் நீக்கிக் காத்தல், நீரில் மூழ்கியும், தீயிடைப்பட்டும் உயிர் போந்தருவாயில் இருப்பின் விரைந்து சென்று தன்னுயிர் கொடுத்தும் பிறவுயிர் பேணல், பசிமிக்கு, கண் பொறி பூத்துக் காதுபஞ்சடைந்து மயக்கமுற்ற காலத்துப் பசிப்பிணி மருத்துவனுய் நின்று பசிபோக்குதல், ஏழ்மை நிலையால் கல்வி கற்க வழியின்றி, கல்வியில் வேட்கையுற்று ஏங்கித் தவிக்கும் திக்கற்ற குழந்தைகளை எடுத்து வளர்த்து அவர்க்குக் கல்விச் செல்வமளித்து அவர்களை நாட்டின் எதிர்கால நன்மணிக ளாக்குதல், (இத்துறையில் கரந்தைத் தமிழ்ச் சங்கம் திக்கற்ற மாணவர் இல்லம ஒன்று ஏற்படுத்தித் திக்கற்ற மாணவர்கட்கு உணவு, உறையுள், உடை முதலியன ஈந்து, கல்வி பயிற்றி உழைத்து வருவதை அறிஞர்கள் பாராட்டியுள்ளனர்.) இன்னும் இவை போன்ற பல்லாற்ருனும் ஏற்படும் பல இடையூறுகளையும் நீக்கி மன்பதைகள் (உயிர்கள்) இன்பமுடன் வாழ வழி செய்தல் முதலிய பலவாகும்.

உலகத்துயிர்கட் கேற்படும் நோய்கள் பலவற்றுள்ளும் மிகக் கொடிய நோய் ஒன்றைக் கூறிச் சென்றனர் நம் சான்ருேர். அப்பிணி பசிப்பிணியே யாகும். அப்பிணியைப் போக்கிய மருத்துவர் இந்நாட்டில் பலர் அக்காலத்து இருந்தனர். அவர்களை நம்புலவர் பசிப்பிணி மருத்துவர் என்று கூறினர். அவர்கள் தான் பேரரசர், சிற்றரசர், செல்வர் இவர்களில் வள்ளற்றன்மையினராவர். ஏன் இப்பிணி கொடியதெனின் 'பசி வந்திடப் பத்தும் பறந்து போம்' என்று

கூறப்பெற்ற காரணத்தால் கொடியதாகும். 'உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே' என்றும் ' உண்டி முதற்றே உணவின் பிண்டம்' என்றும் புறநானூறு பசிப்பிணி போக்கியோரை உயர்த்திக் கூறும்.

நிற்க, சிறிது காலத்திற்குமுன் தோன்றி மறைந்த வள்ளலாரும் 'உயிர்க்கொலேயும் புலேப்புசிப்பு முடையவர்களெல்லாம் உறவினத்தாரல்லரவர் புறவினத்தார் அவர்க்குப் பயிர்ப்புறுமோர் பசி தவிர்த்தல் மாத்திரமே செய்க' எனப் பசிப்பிணிபோக்கும் தன்மையின் உயர்வை அறிவுறுத்திச் சென்ருர்.

இவண் எடுத்துக் காட்டிய பண்டை நூலாசிரியர்களேப் போலவே இவண் குறிப்பிட முடியாத நம் தொல்லாசிரியர் பல்லோர் மனிதப் பிறவி எடுத்ததன் மாண்பு உலக மக்கட்கு நற்ருெண்டாற்றுதலே என்று பரக்கக் கூறிச் சென்றனர்.

இறுதியாக ஒன்று கூறி இதை முடிப்பல். சர். பேதன் பவல் ( Sir Baden Powel ) என்ற ஒரு ஆங்கிலப் போர் வீரரால் ஏற்படுத்தப்பெற்ற சாரணர் இயக்கத்தின் நோக்கம் பிறர்க்குதவி செய்; சமைவாயிரு என்பனவேயாகும். (Help to others; Be prepared) இவ்வியக்கம் இன்று உலகமெங்கணும் பரவி நற்ருெண்டு புரிந்து வருதலே நாம் மறக்க முடியாது.

அன்றியும் கரந்தைத் தமிழ்ச் சங்கப் பெருமன்றத்து மேடைக்கு மேல் முன்புறம் செந்தாமரையும், தமிழ்க் கொடியும், எழுஞாயிறும் ஒரு பெரிய அட்டையில் ஓவியமாக வரையப்பெற்று, அதன் அடியில் **தொண்டு, தமிழ், முன்னேற்றம்** என்ற மூன்று சொற்கள் பொறிக்கப் பெற்றுள்ளன. இச்சொற்கள் இன்று கரு, மையெழுத்துக்களால் பொறிக்கப் பெற்றுள்ளன. ஆனல் இவை பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பெறல் வேண்டும் எனக்கூறி மனிதப்பிறவி எடுத்த நாம் தமக்கென வாழாப் பிறர்க்குரியாளராய் நின்று, நற்ருெண்டாற்றி, இரும்பேருலகெலாம் அருந்தமிழ் பரப்பி, வாழ்வில் முன்னேற்றமடைந்து அதனல் வரும் இன்பப் பேற்றினே எய்துவோமாக!



## பெரிய புராண நாடகப் பகுதிகள்.

ஆசிரியர்: புலவரேறு. அ. வரதநஞ்சைய பிள்ளை அவர்கள்,
தோரமங்கலம்.

தெய்வம் மணக்கும் சிறப்பிற்குரிய பெரிய புராணத்தில் நடித்தற்கேற்ற சில நாயன்மார்கள் வரலாற்றை உட்கருத்துடன் சைவ சித்தாந்த அரும்பொருட்கள் விளங்க உள்ளுறுத்து ஏற்பன கூட்டிப் புனைந்து நாடகமெழுதிக் காண்பாம் என்னும் விருப்பம் தூண்டலின், திருநீலகண்டர், இளையான்குடி மாறனார், இயற்பகையார், மெய்ப்பொருளார், அமர்நீதியார், என்னும் ஐந்து நாயன்மார்கள் வரலாறுகளையும் என் சிற்றறிவுக்கேற்ப எழுதி முடித்துள்ளேன். அவற்றில் ஆங்காங்கே அமைந்த சுவையுடைய சில பகுதிகளை நம் பொழிலன்பர்கள் பார்வைக்கு விடுத்துத் தவறுகள் காட்டப் பெறின் திருத்திக்கொள்வான் முன் வந்தேன். பிழையுள பொறுத்தல் பெரியோர் கடனும்

திருநீலகண்ட நாயனார் தமது மனைவி* கற்பகவல்லியுடன் இன்ப உரையாடல் செய்யுமிடத்து. (சில வரலாறுகளில் மனைவிகள் பெயர் கூறிற்றின்மையின் ஏற்றவாறு புனைபெயர்கள் கூறப்படும்.)

(திருநீலகண்டர்) கற்பகம்! நீ கற்பு அகமுடையவள், மேலும் வேண்டியவற்றை விரைந்து வழங்கும் இயல்பினை. ஆதலின் உனக்கிட்ட பெயர் மிகப் பொருத்தந்தான்.

(கற்பகவல்லி) அன்பரீர்! நீங்களும் தற்புகழ்ச்சியில் விருப்பமுடையவர்களோ?

(திருநீல) என்ன சொல்கின்றாய்?

(கற்ப) இரண்டுடம்புக்கு ஓருயிர் போல்வர் மணமக்கள். அவ்வுயிர் தன் ஓருடம்பை மறந்து பிறிதோருடம்பைப் புகழ்வதும் தற்பெருமைதானே.

(திருநீல) (நகைத்து) பாவாய்! உன் ஆழ்ந்த கருத்து! நன்று!! நம்மைக் கூட்டுவித்த திருநீலகண்டம் வாழ்க!

(கற்ப) வாயாற்கூறப் பெறுததானாலும் எதிரில் நிற்கும் அத் திருப்பெயர்த் திருவுருவம் வாழ்க! வாழ்க!!

(திருநீல) கண்ணே! நீ பேசுவதெல்லாம் குறிப்புரைகளே! விளங்கப் பேச அறியாய் போலும்!

(கற்ப) இல்லை. தாங்கள் கும்பிடும் தெய்வம் யாதோ? அதே தெய்வம் அப்பெயருடன் என்னை ஆட்கொண்டு நேரில் நிற்கின்றது. இன்னும் எப்படி விளக்குவது?

(திருநீல) (யோசித்து) ஓ! தெரிந்தது. நான் வழிபடுவதும் திருநீலகண்டம், என் பெயரும் அதுவே. நீ என்னைக் குறித்தன்றோ பேசுகின்றாய்?

(கற்பக) ஆம்! தங்கள் கடவுளும் தங்கள் உள்ளத்தினின்று நீங்கார். என் கடவுளும் அங்ஙனமே ஆயின், உங்கள் கடவுள்கட் புலப்படார். என் கடவுள்கட்புலனாகும் உருவினர். இதுதான் வேற்றுமை.

(திருநீல) ஆ! மாதர்களின் அழகும், இனிய குரலின் காதல் மொழியும், குணநலங்களும், பேச்சு வன்மையுடன் கூடின் அவ் வுலகிற்பெறும் வீட்டின்பம், இக்குடிசை வீட்டிலும் பெறலாம் போலும். கண்ணே, மட்கலம் வனைய வேண்டும் போவோம். (இருவரும் கைகோத்துக்கொண்டு செல்கின்றனர்.)

திருநீலகண்டர் பரத்தைபால் மறைந்து சென்ற காலையில், குறிப் பாலுணர்ந்த கற்பகவல்லி உள்ளத்தோடு பேசுதல்.

இன்பம் என்றால் என்ன? ஒத்த காதல் உள்ளத்தினராய ஆடவரும் மகளிரும் ஒன்றுகூடி நுகரும் பொதுப்பொருள் அன்றோ? அது: ஆம்! அவருள் ஒருவரை ஒருவர் காதலித்து மற்றவர் பொய்த்து ஒழுகின் அது சிறுமை (கைக்கிளை) உறவேயாம். அது எது போலும்? ஒரு பெண்ணைப் பிடிக்கப் பேய் காமுற்றுத் தொடர்கின்றது. அப் பெண் அப்பேயை வெறுத்தோடுகின்றாள் என்பது போலும். இவ் வாறே என்பால் அன்பற்று வேறோர் மாதை நாடிச் செல்லும் அவரை நான் காதலித்துப் பேயாக மாட்டேன். நானோ பேய்? (கூச்சலிட்டு) நான் உண்மையில் காதலிக்கும் ஒரு மங்கை! பேயல்லேன்!!

அவர்க்கு என்பால் அன்பில்லை என்றறிந்தேன். ஆகவே என் அன்பும் அவர்பால் நுழைய இனி இடமில்லை. ஓ! ஓ! அவர் ஆடவர். விருப்பப்படி நடக்கலாம். நானோ பெண் பிறப்புடையேன்! என் கற்பு எனக்குக் காவல், (சற்று நிதானித்து) அதுவே என் கடமை! ஒரு மனைவி தன் கணவனைப் பேணவும் அவன்பால் இன்பம் பெறவும் படைக்கப்பட்டிருக்கின்றாள், இவ்விரண்டில் ஒன்றை (இன்பத்தை) நான் இழந்தேன். அவரைப் பேணும் கடமை இவ்வுடலில் உயிருள்ள வரையிலும் மாறாது. இனிக்கருதி நொந்து பயனில்லை: அவருள்ளம் யாரை முழு விருப்பத்துடன் ஏற்றதோ அவரிடமே இன்பந்துய்த்து மகிழ்வாராக, பொருந்தாக் காதலை வலிந்து நுகரும் பேதை யல்லேன் யான். பகுக்க முடியாத இன்பப்பொருள் இருவர்க்குப் பகிர்ந்து தரப்பட்டுக் குறைவுறாமல் முழு இன்பத்தையும் ஒருவரே பெறுக. எனக்கு வேண்டாம். என் காதலர் விருப்பம் அதுவானால் யான் செய்யத்தக்கது வேறென்? (சற்று ஆழ்ந்து கருதி தலைநிமிர்ந்து)

பொய்யன்பை மெய்யென்று கொள்வது, மிக ஏமாற்றம், பெரியதொரு வஞ்சம், பெண்களால் பொறுக்கப்படாத கொடுமை! ஆம்! கணவன் செய்யும் கொடுமைகளைப் பொறுப்பதுதான் அடிமை மனைவிகள் கடமை. என் காதலர்! எனக்கு அஞ்சி உள்ளொன்றும் புறமொன்று மாக நடக்க நான் உடன்படேன். அவரைத் திருத்தவும் முற்படேன். அது கனியாப் பழத்தைக் கனிவிப்பது ஒக்கும். ஆசைகாட்டிக் கெஞ்சிப் பெறும் இன்பம் இன்பமாமோ? அது வேசையர்க்குரியது. (பற்களைக் கடித்து) நான் ஒரு வேசையல்லேன்! கற்புடைக் குலமகள் இவ்வுறுதி என் வாழ்நாள் வரையினும் வாழ்வதாகுக.

*திருநீலகண்டர் பரத்தையால் விடுக்கப்பட்டு வீடு திரும்புகின்றார்.*

(வழி இடையில் தமக்குள் தாமே பேசிக் கொள்ளுகிறார்) நம் இச்செய்கை கற்பகம் அறியாள். நன்றாக மறைத்திருக்கிறேன்...... இல்லை. நான் வரும்போது அவள் வீட்டு வேலையிலிருந்தாள். ஆயினும் என்னை அடிக்கடி கூர்ந்து கவனித்ததாகவும் நினைவு. கள்ளமற்ற அவளை நான் மகிழ்வூட்ட வேண்டும். பெண்களுக்கு எவ்வளவு மறைத்தாலும் இவ்வகையில் எப்படியாவது உளவறிந்து கொள்ளும் ஆற்றல் இயற்கையிலேயே உண்டு; மோப்பம் பிடித் தறிவதில் சில விலங்குகளும் கைதேர்ந்தனவல்லவா? இந்நேரம் வெளிச்சென்று தாழ்த்ததற்குக் காரணம் கேட்கப் படலாம். பெரும் பாலும் கேளாதுவிட்டால் மிகவும் நல்லது. காதலிற் பொய் கூறுதல் யாருக்கும் தீங்கு விளைப்பதின்மையின் கடியப்படாது. பொய்ம் மையும் வாய்மையிடத்ததாகும். திருவள்ளுவர்க்கும் இது கருத்தே யன்றோ?

(மனையிற்சேர்கிறார்)

கணவர் வருகையை வழக்கப்படி மகிழ்ந்து வரவேற்காமல் கற்பகவல்லி, கையொன்று செய்ய விழியொன்று நாட முகவாட்டத் துடன் இருக்கின்றாள்.

(திருநீல) (அருகிற் சென்று அவள் முகம் நோக்கி) காதலீ! ஏன் உன் முகத்தாமரை வாடிக்காட்டுகிறது?

(கற்பக) (சிறிது நேரம் பேசாதிருந்து) இரவி ஒளி பெறுவிடின் வாடுமன்றோ?

(திருநீல) திடுக்குற்று இரவியாகிய நான் முற்பட்டிருக்கவும் வாடுவதென்னோ?

(கற்பக) (கடைக்கண்ணோக்கி) இரவிக்கு மலராத கடுமை யுடைய பூவாக இருக்கலாம். அல்லது இரவியின் வெப்ப ஒளிக்கும் வாட்டமுறலாம்.

(திருநீல) (களவு வெளிப்பட்டது போலும் என அஞ்சி) மானே! எப்போதும் திறமையாகப் பேசும் உன் அறிவை வணங்கு கின்றேன். உண்மையைச்சொல். என்னை வேறாக நினையாதே!

(அருகில் செல்கின்ருர்)

(கற்பக) தயவுகூர்ந்து தூரமே நின்று பேசும்! நான் செவி டுடையேன் அல்லேன். (கண்ணீர் பெருக்கல்)

(திருநீல) என் அன்புக்களஞ்சியமே! என்ன கருதினை! ஏன் அழுகை? யான் செய்த தவறு இல்லையே. இருந்தாற் கூறு! காரணம் சொல்கிறேன்.

(கற்பக) ஐயா! காரணம் கேட்கவும் சொல்லவும் வேண்டாம். தங்கள் மனமொத்த இன்பத்திற்கு உதவி செய்யக் கடமைப்பட்டுக் கழுத்தில் தாலி கட்டிக் கொண்ட நான் அதற்கு இடையூறு செய்யவே மாட்டேன் சத்தியம்! மூன்று வார்த்தைகள் வீண்!

(திருநீல) (நடுங்கி, நெட்டுயிர்த்து) கற்பகம்! நீயா இப்படிப் பேசுகின்ருய்? என் உயிர்த்துணைவீ! நீ வெறுக்கத்தக்க பெருங் குற்றம் ஒன்றும் புரிந்திலேன். என்னை மன்னித்தருள். ஆ! பொறேன் இனிப் பொறேன்!

(கற்பக) பொறுத்துத் தீர ஆராய்ந்து துணிந்துதான் பேசுகின் றேன். தங்களை நான் மன்னிப்பதா? தாங்களும், தங்கள் உயிர்க் காதலியும் அடியேனை மன்னித்தருளுங்கள்! நான் உங்கட்கிடையில் குறுக்கிடுபவளல்லேன்.

(திருநீல) என்னைச் சோதியாதே! இனி என் வாழ்நாளளவும் சிறு தவறும் செய்யேன்! என் அன்புக் கொடியை வேரறுக்க வேண் டாம். கண்ணே கங்கையும் மூன்று பிழை பொறுக்கும் என்பர். என் அன்பிற்குரிய மங்கை! இவ்வொரு பிழையும் பொறுத்தருளல் வேண்டும், (கிட்டித் தழுவ தோள் நீட்டுகின்ருர்.)

(கற்பக) (தூர விலகி நின்று கடுத்த குரலில்) எம்மைத் தீண்டு விராயிற் றிருநீலகண்டம் என ஆணை கூறுகின்ருள். (தொடரும்)

---

# வரலாற்றுப் பகுதி
# இரண்டாம் உலகப் பெரும்போர்

(முற்றொடர்ச்சி: துணர் உக, மலர் கக, பக்கம் 304)

சென்ற (*1914-1918*) உலகப் பெரும் போரில் இன (சாதி) உணர்ச்சி மேலீட்டால் "ஸ்லாவ்" இனத்தவரின் பெருமையை உயர்த்த வேண்டுமென்று உருசியப் பேரரசும், 'ஸ்லாவ்' இனத்தவரின் பெருமையை அழிக்கவேண்டுமென்று ஆஸ்திரியப் பேரரசும், உலகமளாவி நிற்கவேண்டுமென்று செருமானியப் பேரரசும், உலகளாவ எண்ணி வெறிகொண்டு ஏனைய நாடுகளை வலுவிற்ருக்கி இடர் விளைக்கின்ற கொடுமைகளை ஒழிக்கவேண்டு மென்று பிரித்தானியப் பேரரசும், செருமானியரைப் பழிக்குப்பழி வாங்கவேண்டுமென்று பிரெஞ்சுப் பேரரசும் ஈடுபட்டுப் போர் செய்தன; அப்போரால் அழிந்த உயிர்களும் சிந்திய குருதியும் இழந்த உடைமைகளும் எண்ணிலடங்காவெனக் கருதிய அறிஞர்கள் இனி இத்தகு பெரும்போர் நிகழாமற்றடுக்க வேண்டுமென்றே எல்லா நாட்டுக் கழகத்தை (சர்வ தேச சங்கத்தை) நாட்டினர். அச்சங்கத்தாலாய பயன் என்? எல்லா, நாட்டுக் கழகத்தில் எல்லா நாடுகளும் உறுப்பாகச் சேர்ந்தன; சேர்க்கப்பட்டன. எல்லா நாட்டுக் கழகத்தின் ஒப்பந்தத்தின் வண்ணமும் ஆணையின் வண்ணமும் எந்நாடும் நடந்துகொள்ளவில்லை. பலநாடுகள் இக்கழகத்திலிருந்து விலகிச் சென்றன; சில நாடுகள் தங்கள் நோக்கத்திற்கும் கொள்கைகட்கும் முட்டுக்கட்டையாய் இக்கழகம் குறுக்கிட்டபோது, இக்கழகத்தைத் தயக்கமின்றி உதறித் தள்ளிவிட்டன. இக்கழகக் கண்முன்னேயே உருசியாவில் சோவியத்துப் பொதுவுடைமை ஆட்சியும், இத்தாலியில் பாசிசஆட்சியும், செருமானியர் நாட்டில் 'நாசிச' ஆட்சியும், யப்பானில் பேராட்சி வெறிக் கடிப்படையாயுள்ள போர்வீரர் (ராணுவ) ஆட்சியும், பிறந்து வளர்ந்து நடைமுறையில் நிகழ்ந்து வந்தன. இந்நாடுகளில் இக்கழகக் கொள்கைக்கு மாருக இத்தகு ஆட்சிகள் தோன்றி வளர்ந்து நிகழ்ந்து வருதலை இக்கழகம் கண்டுவைத்தும் ஒன்றுஞ் செய்தற்காற்றலின்றிக் காலங்கடத்திற்று. இக்கழக வரலாற்றைப் பின்னர் விளக்குகின்ருேம். கடந்த உலகப் பெரும்போருக்குப் பின்னெழுந்த புரட்சி யுணர்ச்சியை நன்கு பயன்படுத்திக்கொண்ட செருமானியர் தொழிற்சாலைகளுக்கு மாருகப் போர்க் கருவியுண்டாக்கும் (ஆயுத) சாலைகளையும், அறிவுள்ள தொழிலாளர்கட்கு மாருகத் திமிர்கொண்ட வீரர்களையும், வாணிபக் கப்பலுக்கு மாருகப் போர்க் கப்பல்களையும், வாணிபத்துறைகளுக்கு மாருகப் போர்த் (ராணுவத்) துறைகளையும், வாழ்வியற்கலைக்கு மாருக வாழ்வழித்துத் தீமை செய்தற்குக் கருவியாகும் (நன்மை விளைக்கும் அறிவியற்கலையுள) அறிவியற் (விஞ்ஞானக்) கலைகளையும் பெருக்கினர். இப்பெருக்கின் விளைவே இவ்விரண்டாம் உலகப்

பெரும்போர் எனலாம். அறிஞர்கள் பேசிவந்த உலக ஒற்றுமை மக்களுரிமை மக்கட்டலைமை முதலிய கொள்கைகள் யாவும் நிலைபெற வேண்டுமேல் அச்சு நாட்டினர் அடக்கப்பெறல் வேண்டும்; அன்றி அழிக்கப்பெறல் வேண்டுமென அறிஞர்கள் கருதினர். இவ்வுரிமை களைக் காப்பான் வேண்டி, மக்கட்டலைமை (ஜனநாயக) நாடுகளாய பிரித்தன், உருசியா, பிரெஞ்சு முதலிய நாடுகளும், இவற்றிற்குத் துணையாக அமெரிக்காவும், இவற்றை அழிப்பான் வேண்டி எழுந்த எல்லா ஆட்சித் (சர்வாதிகாரத்) தலைவர்களான இட்லர் முசோலினிக் குத்துணையாக யப்பானும் ஒன்றி நின்று இப்போரை நடாத்தின. போர் விளைதற்குரிய காரணங்களென்ன? அக்காரணங்களைக் கண் டறிந்து அகற்றி விட்டால் மீண்டும் போர் நிகழாவன்றோ? ஒவ் வொரு பேரரசும் தாம் தாம் அடிமைப் படுத்தியுள்ள நாடுகட்கு உரிமையை வழங்கித்தம் ஆட்சியின் எல்லையைச் சுருக்கிக் கொண்டால் போர்க்குரிய காரணங்கள் நீங்கி, மீண்டும் போர் நிகழாவென அறிஞர்கள் ஆராய்ந்து கூறுகின்றனர்.

**"எதற்காகப் போராடுகிறோம்"** என்ற தலைப்பில் ஆங்கில அரசியற் பேரறிஞராகிய H. G. வெல்ஸ்' ஒரு நூலெழுதியுள்ளார். புகழ் பெற்ற எழுத்தாளரும், அரசியற் பேரறிஞருமாகிய **'ஹெரால்டு லாஸ்கி** என்பார் **"இங்கிருந்து எங்கே போகிறோம்?"** என்ற தலைப்பில் ஒரு சிறு நூல் எழுதியுள்ளார். இவ்விரு பேராசிரியர்களும், போரொழிய வேண்டுமேல், உலக வல்லரசுகள் உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் உள்ள மக்கட்கு உரிமை வழங்கவேண்டுமென ஒருமுகமாக வற்புறுத்தி யுள்ளனர், உரிமை வேண்டியே மக்கள் உடன்றெழுகின்றனர். மண்ணெய் (மண்ணெண்ணை என்பர்) ஆற்றலையும், மின்சார ஆற்றலை யும் மனிதன் தன் ஆற்றலுக்குட்படுத்தி அடக்கியாட்சி புரிந்த பின் இவற்றால் எண்ண முடியாத வியப்பிற்குரிய செயல்கள் உலகில் நிகழ் கின்றன. பொருட் கலவைக்கலை அல்லது செயற்கைப் பொருளறி வியற்கலை (ரசாயனக்கலை) வளர்ச்சியும் வியப்பிற்குரிய செயல்களைப் புரிகின்றது. அணுவாற்றலையும் மனிதன் அடக்கியாளும் ஆற்றல் பெற்றுவிட்டான்.

(தொடரும்)

**பொழிலாசிரியர்**

உ

# மதுரை மாவட்டத் தமிழ்த் தொண்டர் மாநாடு,

### சின்னமனூர்.

வரவேற்புக் கழகத் தலைவர்:
திரு. கே. சுப்பையா அவர்களின்

## வரவேற்புரை.

செந்தமிழ்த் தாயின் திருப்பணியே தவப்பணியும் தலைமைப் பணியுமாமென ஆர்வம் பூண்டு இவண் வந்து குழுமியிருக்கும் தமிழ்த் தொண்டர்களே! சொற்பெருக்காளர்களே! புலவர் பெருமக்களே! மாநாட்டுத் தலைவரவர்களே! வருக, வருக, உங்கள் வரவு நல் வரவாகுக!

உங்கள் அனைவரையும் வரவேற்கும் வாய்ப்பைப் பயன் படுத்திக் கொண்டு தொண்டின் ஆர்வத்தால் சில கூறலுறுகின்றேன்.

செந்தமிழ்த் திருநாடு எனச் சிறப்பித்துக் கூறப்பட்டது இம் மங்கலப் பாண்டி வளநாடு; இதினும் சிறந்தது மதுரை மாவட்டம்; மதுரை மாவட்டத்தினும் இப்பெரியகுளம் வட்டம் தமிழ் உணர்ச்சியும் வளர்ச்சியும் மிக்கது. இம்மாநாட்டை நடத்த வேண்டும் என்ற கருத்து இப்பகுதியிலேயே பிறந்தது. இவ்வட்டத்தில் தமிழ்ப் பணிபுரியும் புலவர்கள் பலர்; அறிஞர்கள் பலர்; நிறுவனங் கள் சில. இச் சின்னமனூர், உத்தமபாளையம், கோம்பை, போடி, பெரியகுளம் ஆகிய இடங்களில் உள்ள தமிழ் நிலையங்கள், தமிழ் வகுப்புகள் நடத்துதல், விரிவுரைகளாற்றுவித்தல், புலவர் திரு நாட்கள் கொண்டாடுதல் முதலிய துறைகளில் தமிழ்த் தொண் டாற்றி வருகின்றன. அவற்றையியக்கும் அறிஞர்கள் தங்களைத் தமிழன்னையின் திருவடித் தொண்டர்களென மதித்துத் தமிழ்த் தொண்டினை இம்மாவட்டம் முழுதும் பரப்ப முயல்கின்றார்கள். அம்முயற்சிக்கு உணர்வு நல்கும் கருத்துடன் கூட்டப்பட்டதனாலே யே இம்மாநாடு தமிழ்த் தொண்டர் மாநாடாயிற்று.

நமது அருமைத் தாய்மொழியாந் தமிழானது தொன்மையால், இலக்கண-இலக்கியப் பரப்பால், இயலிசை நாடகப் பாகுபாட்டில், தெள்ளிய கருத்துக்களையும் கொள்கைகளையும் உடைமையால் மிகுந்த மாண்புடையது. புலவர்களால் செழித்தது; புரவலர் களால் வளர்ந்தது; வள்ளல்களால் வாழ்ந்தது; பொதுமக்களால் போற்றப்பட்டது. இதன் எல்லையற்ற பெருமைகளிற் சிலவற்றைக் கூறுதலும் உங்கள் காலத்தைக் கொள்ளுவதாக அமையும். எனி னும் மரபுபற்றிக் கூறுகின்றேன். பொறுத்தருள்க.

தமிழ் மொழியின் தொன்மையான காலத்தை வரையறுத்துக் கூறுதல் இயலாது. இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னரே கடைச்சங்கம் திகழ்ந்தது. அதற்குப்பல ஆயிரம் ஆண்டுகட்கு முன்பே இடைச்சங்கமும் தலைச்சங்கமும் இருந்தன. தமிழ் மன்னர்கள் அச்சங்கங்களில் புலவர்களைக் கூட்டினர். தாமுங் கூடினர்; தமிழைப் படித்தனர்; பயின்றனர்; இயல் நூல் வகுத்தனர்; இசை நூல் ஆய்ந்தனர்; கூத்து நூல் யாத்தனர். "தீந்தமிழின் துறைவாய் நுழைந்தனையோ" என்றும் "ஏழிசைச் சூழல் புக்கோ" என்றும் மாணிக்கவாசகர் கூறுவனவற்றால் தமிழ்ப் புலவர்கள் சூழல் இருந்தமையும் தமிழாராய்ச்சி செய்தமையும் நன்கு புலப்படும். அச்சங்க காலத்தே தோன்றிய தொகை நூல்களின் பரப்பும் காவியங்களின் சிறப்பும் நமது முன்னோர்களின் தமிழ்த் தொண்டுக்கு எடுத்துக் காட்டுகளாகத் திகழ்கின்றன.

ஒரு நாட்டு மக்களின் சிறந்த நாகரிக மேம்பாட்டை விளக்குபவை: அம்மக்கள் பேசும் மொழியில் அமைந்த இலக்கியங்களேயாகும். தமிழில் பண்டும் இன்றும் திருந்திய கருத்துடைய சான்றோர்களால் வரையப்பட்ட இலக்கியங்கள் கடல் போல் பரந்து கிடக்கின்றன. வேறு மொழிகளிலே சிறந்த நூல்கள் தோன்றுவதற்கு முன்னே தமிழில் அருமையான நூல்கள் தோன்றியுள்ளமை தமிழராகிய நமக்குப் பெருமிதம் தருவதாகும். தொல்காப்பியம் என்பது தமிழில் தலைமை சான்ற பேரிலக்கண நூலாகும். பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு, ஐம்பெருங் காவியங்கள் என நூல்களைத் தொகுத்தும் வகுத்தும் ஒழுங்குபடுத்தியதை நோக்குவோர்க்குத் தமிழர் நூல்களைத் தங்கள் அழியாச் செல்வமாகப் பாதுகாத்து வந்தமை புலப்படும். தமிழ் இலக்கிய வானிலே ஈடும் எடுப்புமின்றி ஒளி வீசித் திகழ்வது 'திருக்குறள்' என்னும் தூய நூலன்றோ? வள்ளுவர் வகுத்த அப்பெரு நூலே 'தமிழர் திருமறை' யாக விளங்குவது. தமிழ் மக்கள் தூய வாழ்வின் விரிவுரைகளாய் இலங்கும் சங்க நூல் வெள்ளம் ஒரு புறமிருக்க, அதற்குப்பின் வந்த இளங்கோ, திருத்தக்கதேவர், சேக்கிழார், கம்பர் முதலான அரும் புலவர்களின் பெருநூல்களையும் தமிழர் பெற்றுள்ள இலக்கியக் கருவூலங்களெனச் சொல்லுதல் வேண்டும்.

மேற்கூறிய நூல்களிலேதான் தமிழரது நல்ல தூயவாழ்வுக்கு வேண்டிய நாகரிகமான கருத்துக்கள் காணப்படுகின்றன. ஆயிரம் ஆயிரம் ஆண்டுகட்கு முன்பே இத்தகைய சிறந்த பண்பாடுகள் வேறு எந்த நாட்டினரிடத்துக் காணப்பட்டன? நம்மவரிடத்தே தாம் காணப்பட்டன. தமிழர் கடவுளிடத்து வேண்டியன பொருளும் பொன்னும் போகமும் அல்ல, அருளும் அன்பும் அறமும்

மூன்றுமே ஆகும். தமிழ் வேந்தர் நமரெனக் கோல் கோடாது பிற ரெனக் குணம் கொல்லாது ஆட்சி புரிந்தனர். தமிழச் சான்றோர் புகழெனின் உயிரும் கொடுப்பர்; பழியெனின் உலகுடன் பெறினும் கொள்ளலர். தமிழ்ச்செல்வர் - இந்திரர் அமிழ்தம் இயைவதாயினும் இனிது எனத் தனித்திருந்துண்ணர்; பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் அவர் கொள்கை. தமிழ்ப்பெண் தன் கணவனோடு கொண்ட காதல் நிலத்தினும் பெரிதே; வானினும் உயர்ந்தது; நீரினும் ஆரளவு இன்றே எனக்கூறினள்; மழைவளந்தரும் பெண்டிராயின் பிறர் நெஞ்சு புகார் எனப் பேசினள். வணிகர் கொள்வதும் மிகக்கொளாது கொடுப்பதும் குறைபடாது பல் பண்டபம் பகர்ந்து நாட்டுக்கு நன்மை செய்ய வேண்டுமென்பது தமிழ்ச்சட்டம். தமிழ்ப் பெரியார் பெரியோரை வியத்தலும் இலமே; சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே என்று அறவுரை புகன்றனர். இன்னும் இங்ஙனம் திட்பமும் நுட்பமும் வாய்ந்த எத்துணையோ கருத்துக்களும் கொள்கைகளும் தமிழ் நூல் வெள்ளத்தில் நாம் காணக்கிடக்கின்றன. இடைக்காலச் சான்றோர்களும் தாம் எடுத்துக்கொண்ட நீண்ட கதைகளின் வாயிலாக நடுநடுவே நமது வாழ்வுக் களஞ்சியமாகப் பல அரிய செய்திகளை நலம் பொருந்தப் பெருந்தன்மையோடு இயம்பி வைத்திருக்கிறார்கள்.

நிற்க, அரசியல் குழப் பங்களால் 18-ம் நூற்றாண்டிலும் அதற்குமுன் சில காலமும் தமிழிலக்கியத்திற்கு இருட்டடிப்பு ஏற்பட்டிருந்ததுண்டு. ஆனால் இவ்விருபதாம் நூற்றாண்டின் தொடக்கம் முதற்கொண்டு தமிழ் வளர்ச்சியில் புதுமலர்ச்சி காணப் படுகின்றது என்பதை அனைவரும் அறிவர். தனிப்பட்டோரும் கிழமை, திங்கள் வெளியீடுகளும் நிறுவனங்கள் சிலவும் பல்கலைக் கழகங்களும் பதிப்பகங்களும் சில இயக்கங்களும் தமிழ் மலர்ச் சியைச் செய்தன; செய்து வருகின்றன.

தனிப்பட்டவர்களில் சுவாமி வேதாசலம் என்னும் மறை மலையடிகளும், திரு. வி. கல்யாணசுந்தரனாரும், திரு. சுத்தா னந்த பாரதியாரும் தமிழ் உரை நடையில் மலர்ச்சி தந்தவர் களாவர். இவர்களைப்போல் பெருந் தொகுப்பாக உரை நடை நூல் களை வெளியிட்டோர் அரியராவர். இவர்களும் இன்னும் பல தமிழறிஞர்களும் வெளியிட்ட உரை நடை நூல்கள், மிகுதியாக வெளிப்போந்து உலாவுகின்றன; மக்களிடத்து அறிவுநூல் பயிலும் பயிற்சியையும் ஆர்வத்தையும் வளர்க்கின்றன.

தம் கவித்திறத்தால் தமிழ் மலர்ச்சி கண்டோரில் காலஞ் சென்ற திரு. சுப்பிரமணிய பாரதியார் தனிச்சிறப்புடையார். அவர் பாடல்கள் தமிழர்களுக்கு விடுதலை ஆர்வத்தையும் தாய்

மொழிப் பற்றையும் சமூக சீர்திருத்தத்தையும் சமத்துவத்தையும் உண்டாக்கி வளர்த்தன. திரு. பாரதி தாசன். திரு. இராம லிங்கம் பிள்ளை, திரு. தேசிக விநாயகம் பிள்ளை ஆகியோர் தங்கள் செஞ்சொல் தொடுத்த தீம் பாடல்களால் தமிழர் உள்ளத்தைக் கவர்ந்து வருகின்றனர். இவர்களுக்கு இணையாகத் தமிழ்க் கவிதை புனையும் திறம்படைத்தோர் இக்காலத்து இல்லாமலும் இல்லை. அத்தகையோரைக் கண்டு கவிதையுலகில் அவர்களை இணைத்துப் பயன் படுத்திக் கொள்ளும் பணியில், நாம் இன்னும் முற்படவில்லை. வாய்ப்பு நேர்ந்தால் அவர்களும் இலக்கிய உலகில் ஒளிவிட்டுத் திகழ்வார்கள்.

வார, மாத வெளியீடுகள் சிலவும் இந்நூற்றாண்டில் தமிழிலக்கிய மணம் கமழ வெளிவருகின்றன. அவற்றைச் சிறந்த எழுத்தாளர் பலர் அழகுபடுத்துகின்றனர். தமிழ் நலம் குன்றாத சிறுகதைகளும் தொடர்கதைகளும் மொழிபெயர்ப்புக்களும் வரையும் எழுத்தாளர் நாட்டில் பெருகி வருதற்கான குறிகள் காணப்படுகின்றன. தமிழ் நாட்டில் வெளியீடுகளை நடத்துவோர் வாணிப மனப்பான்மையை விட்டு, தமிழ் வளர்ச்சியே கருதி மிகுதியாக எழுத்தாளர்களை ஆதரிப்பார்களானால் இன்னும் மிகுத்த நன்மையை எதிர் பார்க்கலாம். மொழி வளர்ச்சியிற் கருத்துடைய செல்வர் சிலராவது பெருங் கொடை நல்கி இப்பணியைத் தொடங்க வேண்டும்.

சென்னை, அண்ணமலைப் பல்கலைக் கழகங்கள் நடத்தும் தமிழ்த் தேர்வில் வெற்றி பெற்ற தமிழிளைஞர்களாகிய புலவர்கள் பள்ளிக்கூடங்களில் தமிழாசிரியர் பீடங்களில் அமர்ந்து மாணவர்களுக்குத் தமிழில் புது உணர்ச்சி தருகிறார்கள். ஆயினும் அத்தமிழாசிரியர்களின் வாழ்க்கைத்தரம் உயரும் வகை இன்னும் காணப்படவில்லை. அரசியலாரும் பள்ளிக்கூடங்களை நடத்துவோரும் முறையுடன் அவர்களைக் கவனிப்பாரானால் தமிழுணர்ச்சி இன்னும் பெருக வழியுண்டாகும். தமிழகத்தில் எட்டாவது வகுப்பு வரையுள்ள பள்ளிக்கூடங்களில் புலவர் பட்டமுற்ற தமிழாசிரியரை அமர்த்தலாம் என்பது அரசியலார் ஏற்பாடு. அங்ஙனமிருந்தும் சில ஆட்சிக்கழகங்கள் அதனைச்செயலில் நிறைவேற்றாதிருக்கின்றன. பல்கலைக்கழகங்கள் வேண்டிய அளவு புலவர்களைத் தோற்றுவிக்காமையாலும் தமிழைப்படித்தால் வாழ்க்கையை முட்டின்றி இயக்க முடியாதென்ற நிலைமை இருப்பதாலும் புலவர்கள் கிடைப்பதும் அரிதாயிருக்கிறது.

அண்ணமலைப் பல்கலைக் கழகத்தைச்சார்ந்த தமிழ்க் கல்லூரியைத்தவிர சென்னைப் பல்கலைக்கழகத்தைச்சார்ந்தும் சில தமிழ்க்

கல்லூரிகள் இருக்கின்றன. அவை தமிழ்நாட்டுக்கு மிகச் சிறு அளவினவே. அவற்றிற் பயில்வோர் தொகையும் சிறிதே. தமிழ் நாட்டில்பேச்சு வழக்கற்ற வடமொழிக்குப் பல பள்ளிக்கூடங்கள் பலகாலமாக ஏற்பட்டிருக்க நம் அருமைத் தாய்மொழியாம்தமிழுக் குச் சிலகாலமாகச் சில பள்ளிக்கூடங்களே ஏற்பட்டிருப்பது குறித்து யாது சொல்வதென்றே தோன்றவில்லை. நமதுமொழிப் பற்றின்மையைக் குறிக்க இதனினும் வேறு அளவு கோல் வேண்டுமோ? அரசியலார் தமது நேர் ஆட்சியிற் சில ஆங்கிலக் கல்லூரிகளையும் பள்ளிக்கூடங்களையும் ஆசிரியர் பயிற்சிக் கூடங் களையும் வைத்து நடத்துதல் போலத் தமிழ்க் கல்லூரிகளையும் ஏன் வைத்து நடத்துதல் ஆகாது?

மதுரையில் இப்போது உள்ள தமிழ்ச் சங்கம் பண்டைய தமிழ்ச் சங்கத்தை நினைவுகூர்ந்து நிறுவப்பட்டதாகும். அது போதிய விளக்கத்துடன் திகழவில்லை. சக்கத் தேர்வுக்குச் செல்வோர் தொகை சுருங்கி வருகிறது. தமிழ்நாட்டில் கடந்த முப்பது ஆண்டுகளாக விடாமுயற்சியுடன் தமிழ்த்தொண்டு செய்துவரும் நிறுவனம் தஞ்சையை அடுத்த கரந்தைத் தமிழ்ச் சங்கமாகும். அதன் வளர்ச்சிக்குக் காரணமாயிருந்த காலஞ்சென்ற தமிழவேள். உமாமகேசுவரனாரைத் தமிழுலகம் நன்கு அறியும். கரந்தைத் தமிழ்ப் பெருமன்றத்தின் சார்பில் ஓர் தனித் தமிழ்க் கல்லூரி தோன்றியுள்ளது. நூல்கள், வெளிவந்துள்ளன. மேலைச்சிவபுரி சன்மார்க்க சங்கத்தார் ஓர் செந்தமிழ்க் கல்லூரி நிறுவி நடத்து கின்றனர். தமிழ் முன்னேற்றங்கருதிய இந்த நிறுவனங்களி னாலேயே மகா-ள-ள-ஸ்ரீ,விவாக சுப முகூர்த்தப்பத்திரிகை என்ற பிறமொழிச் சொற்றொடர்கள் வழக்குவீழ்ந்து திருவாளர்,திருமண அழைப்பு என்னும் நல்ல தமிழ்ச் சொற்றொடர்கள் ஆட்சிக்கு வரலாயின. திருப்பனந்தாள்காசி மடத்துத்தலைவர் அவர்கள் ஏற்படுத்தி யுள்ள தனித் தமிழ் வித்துவான் தேர்வுக்கு 1000 ரூபாய்ப் பரிசும் மற்றும் பல தமிழ்ப் பரிசுகளும் தமிழ் கற்பார்க்கு ஊக்கமளிக்கும் சிறந்த ஏற்பாடுகளாகும். மேற்படி மடத்தினரும் மயிலம் வீர சைவ மடத்தினரும் தமிழ்க் கல்லூரிகளை நிறுவியிருக்கின்றார்கள்.

மேற்கூறிய நிறுவனங்களேயன்றிச் சில பதிப்பகங்களும் நல்ல தமிழ்த் தொண்டு செய்து வருகின்றன. நீண்ட நாளாக அழகிய செந்தமிழ் நடையில் வனப்புள்ள தமிழ் நூல்களைப் பதிப்பித்து வருவது சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகமாகும். சங்கநூல் மாநாடுகள் நடத்திச் சொற்பொழிவாளர்கள் பேச்சை நூல் வடிவாக்கியிருக்கின்றனர் அக்கழகத்தார். இதனையடுத்தது "சத்தி காரியாலயம்" "அன்பு நிலையம்" "புதுமைப் பதிப்பகம்", "தமிழ்ப் பண்ணை" முதலிய பதிப்பகங்கள் அரசியல், சமூகம்,

சமயம், பெரியோர் வாழ்க்கை வரலாறு, இலக்கியம், கவிதை நூல்களை வெளியிட்டுத் தமிழ் வளர்ச்சித் தொண்டு செய்து வருகின்றன.

இந்நூற்றுண்டிலே ஏற்பட்ட அரசியல் கிளர்ச்சி தமிழுணர்ச்சிக்கு மிக்க ஆக்கந்தந்திருக்கின்றது எனலாம். ஆங்கிலம் படித்துத் தமிழில் ஊமையாயினோர் தமிழிலேயே பொதுமக்களிடம் பிரசாரம் செய்ய வேண்டிய கட்டாயம் ஏற்பட்டுவிட்டது. தாய் நாட்டு விடுதலைக்குத் தாய்மொழியறிவு வேண்டுவதில்லை என்ற குருட்டுக் கொள்கை வீழ்ந்து 'தாய் மொழிப் பற்றே தாய்நாட்டுப் பற்று' என்ற கருத்து ஓங்கலாயிற்று, மொழிவாரியாக மாகாணங்கள் பிரிக்கப்பட்டு, தாய்மொழியிலேயே அரசியல் நடைபெறவேண்டுமென்னும் கொள்கை வலுவடைந்துள்ளது. அண்மையில் தோன்றி நடைபெறும் தமிழிசையியக்கம் தமிழுக்கு ஆக்கம் தரும் இன்றியமையாத இயக்கமாகும்.

இவற்றாலெல்லாம் தாய் மொழிப் பற்றும் கிளர்ச்சியும் தமிழரிடை வளர்ந்துவரினும் அப்பற்றும் கிளர்ச்சியும் போதிய வலுப்பெறவில்லை என்றே சொல்லலாம். தெலுங்க நாட்டினரோ, வங்க மொழியினரோ தம் தாய் மொழியிற் கொண்ட பற்றுதல் தமிழரிடம் இல்லை. ஆங்கிலம்படித்த தமிழர் அன்றாட வாழ்க்கையில் ஆங்கிலத்திற்பேச வெட்கப்படுவதில்லை. ஆங்கிலத்திலேயே நண்பருடன் உரையாடுகின்றனர். திருமண அழைப்பு இதழின் ஒரு பகுதி ஆங்கிலத்தில் அச்சிடப்படுவதை தமிழன் பெருமையாகக் கருதுகிறான். இந்த அசட்டு மதிப்பும் மனப்பான்மையும் நம்மை விட்டு விரைவில் நீங்குதல் வேண்டும். பண்டைக்காலம் முதல் தாய்மொழியில் நீங்காத பற்றுடைய நாட்டு மக்களே நாகரிகத்தில் உயரிய நிலையையடைந்து தங்கள் சுதந்திரத்தைக் காப்பாற்றும் திறமையுடன் வாழ்ந்து சிறப்படைந்தனர் என்பதை வரலாறுகளால் உணர்ந்திருக்கிறோம். வெள்ளை நிறத்தவர் நம் தாய் நாட்டை அடிமைப் படுத்தி ஆளத் தங்கள் ஆங்கில மொழியை ஒரு கருவியாக வைத்திருக்கின்றார்கள் என்பதை அறியாதார் எவர்? நம் உரிமையைப் பறிக்க ஆங்கில மொழியைத் திணிக்கவேண்டுமென்று மெக்காலே அவர்கட்கு வழி காட்டினர். 'இமய முதல் குமரி வரை ஒரு மொழி வைத்து உலகாண்ட' தமது பெருமை யிழந்து தென்னிந்தியாவில் சுருங்கிக் கிடக்கின்றனர் தமிழர். தாய் மொழி மறந்து பிறமொழி பேணியமையால் தமக்குள் சிலர் மலையாளி, ஆந்திரர், கன்னடர், துளுவர் எனப் பிரியவிட்டுப் பத்து மாவட்டங்களில் ஒடுங்கிக் கிடக்கின்றனர். எனவே நாட்டு விடுதலைக்கும் நமது நாகரிக உயர்வுக்கும் முதன்மையாகச் செய்ய வேண்டுவது தாய்மொழித் தொண்டு என்பதை உணர்ந்து இனி

ஆவனவற்றைச் செய்ய முற்படுவோமாக. இக்கருத்துடன் மதுரை மீனாட்சி ஆலை, உரிமையாளர், திரு. கரிமுத்து தியாகராசச் செட்டியாரவர்கள் தொண்டாற்றத் திட்டமிட்டுளதைப் போற்றி வெற்றி காண்போமாக.

தமிழ் மொழி பேணும் கருத்தில்லார்க்கு அரசியல் அதிகாரமும் பல்கலைக்கழக ஆதிக்கமும் இருத்தலாகாது. தமிழ் மாகாணம் பிரிக்கப்பட்டுத் தமிழிலேயே ஆட்சி நடைபெறுதல் வேண்டும். தமிழில் அன்றாட நடவடிக்கைகளை வைத்துக்கொள்ளுமாறு நகர், மாவாட்ட ஆட்சிக்குழுவினரைவற்புறுத்துதல் வேண்டும். அம்முறையில் வழிகாட்டுவோராயிருக்கும் காஞ்சி,உணவுப்பங்கீட்டு அலுவலர் திரு. கீ. இராமலிங்கனார் எம். ஏ; போன்றாரைத் தமிழ் மக்கள் பாராட்டுதல் வேண்டும். தமிழ் நாட்டில் உள்ள உயர் நிலைப்பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் தமிழைக்கட்டாய பாடமாக்குதலோடு தமிழ் மொழிப் பாடத்திற்கிருக்கும் நேரத்தையும் மிகுதிப்படுத்துதல் வேண்டும். 'தமிழிசைஇயக்கம்', நாடெங்கும் இன்னும் விரிவாக்கப்பட்டு,எங்கும் தமிழிசை முழங்குதல் வேண்டும். இனிய தமிழ்ப்பாடல்களே தமிழரில்லங்களில் நிறைதல்வேண்டும். தமிழ் நாட்டின் உயர் கலைகளில் ஒன்றாகிய நடனக் கலையைத் தமிழ்க் குழந்தைகளுக்குப் பயிற்றுவித்தல் வேண்டும். தமிழ் நாடகக் கலையை நன் முறையில் வளர்த்தல் வேண்டும். தமிழ் கல்லாத தமிழரும் தமிழ் நூலில்லாதவீடும் தமிழகத்திலிருத்தலாகாது. தமிழ்ப்பெண்களுக்குப் பண்டைத் தமிழ் நூல்களைப் பயிற்றுவிக்காமலிருப்பது மன்னிக்கமுடியாத பெருங் குற்றமாகும் மியூசிகல் அகாடமி, ரிக்கிரியேஷன் கிளப், ரீடிங் ரூம், பத்ம விலாஸ், கிருஷ்ண விலாஸ், கலா நிகேதனம் என ஆங்கிலத்திலும் பிறமொழியிலும் உள்ளபெயர்களை ஒழித்து, இசை மன்றம், படிப்பகம், என அவைகட்குத் தமிழ்ப் பெயர்களையே கட்டாயமாக இடுதல் வேண்டும். தமிழுக்குழைத்து உயர்வளித்த தமிழ்ப் பெரியார்களின் திருநாட்கள் நாடெங்கும் எழுச்சியுடன் நடைபெறுதல் வேண்டும். அவர் தம் திருவுருவப் படங்களை வீடுகளில் விளக்கமாக வைத்தல் வேண்டும். தைத்திங்கள் முதல் வாரத்தில் எல்லாவிடத்தும் ''தமிழ்த் திருநாள்'' கிளர்ச்சியுடன் கொண்டாடப் பெறுதல் வேண்டும். தமிழர் குடியேறி வாழும் பிற மாகாணங்களிலும் அயல் நாடுகளிலும் ''தமிழ் இயக்கம்'' தொடங்கப் பெறுதல் வேண்டும். ''பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்'' ''ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்'' ''யாதும் ஊரே யாவரும் கேளிர்'' என்றெல்லாம் தமிழ் அறநூல்கள் முழங்கவும் இவற்றை உணராமல் தமிழர் சாதியால் வேறாகி, சமயத்தால் மாறுபட்டு, மொழியினால் கூறு பெற்றுக் கிடக்கும் இழிநிலை விரைவினில் ஒழிதல்

வேண்டும். 'தமிழ்' என்னும் ஒரு குடை நிழலில் அனைவரும் ஒன்று படுதல் வேண்டும். தமிழருக்குத் தாயகமான மதுரைமா நகரில் பல்வகைத் தமிழ்க் கலையும் ஒருங்கு வளர்தற்கான சிறப்புடைய "முத்தமிழிக்கல்லூரி" ஒன்றை விரைவினில் தொடங்க வேண்டும். இவையெல்லாம் நிகழ்தற்கான ஊக்கம் அளிக்கும் "தமிழ் இல்லம்" "தமிழ் மாளிகை" "தமிழ் மன்றம்" "கழகம்" "ஆலயம்" "படிப்பகம்" முதலியன இம் மதுரை மாவட்டத்துள்ள ஊர் தோறும் தழைக்கத் தமிழ்த் தொண்டர்கள் உடனே வீறு கொண்டு எழுவார்களாக. அதற்குரிய உணர்வை இம்மாநாடும், தலைவர்களும், சொற்பொழிவாளர்களும் வழங்குவார்களாக.

நாடெங்கும் தமிழ்! தமிழ்!! என்ற முழக்கம் செழிப்பதாக!

தமிழ் வாழ்க! தமிழர் வாழ்க!!, தமிழ்நாடு வாழ்க !!!.

"தேமதுரத் தமிழோசை உலகமெல்லாம்
பரவும்வகை செய்தல் வேண்டும்" — பாரதியார்.

"தமிழுண்டு தமிழ்மக்களுண்டு - இன்பத்
தமிழுக்கு நாளும் செய்வோம் நல்லதொண்டு"
— பாரதிதாசன்

